உ

ஓம்

பரப்பிரம்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | குரோதன ௵ ஐப்பசி ௴ ௧ ௳ | பகுதி |
| --- | --- | --- |
| 11 | 1925 ௵ அக்டோபர் ௴ 17 ௳ | 4 |

## கடவுள் வணக்கம்.

கொல்லாமை யெத்தனை குணக்கேட்டை நீக்குமக்
குணமொன்று மொன்றிலேன்பால்
கோரமெத் தனைபக்ஷ பாதமெத் தனைவன்
குணங்களெத் தனைகொடியபாழ்
கல்லாமை யெத்தனை யகந்தையெத் தனைமனக்
கள்ளமெத் தனையுள்ளசற்
காரியஞ் சொல்லிடினு மறியாமை யெத்தனை
கதிக்கென் றமைத்த வருளில்
செல்லாமை யெத்தனை விர்தாகோஷ்டி யென்னிலோ
செல்வமெத் தனைமுயற்சி
சிந்தையெத் தனைசலன மிந்த்ரஜா லம்போன்ற
தேகத்தில் வாஞ்சை முதலா
அல்லாமை யெத்தனை யமைத்தனை யுனக்கடிமை
யானே னிவைக்குமாளோ
அண்டபகி ரண்டமு மடங்கவொரு நிறைவாகி
யானந்த மானபரமே. (1)

பத்திநீ பத்திக் கான பலனுநீ பலவாச் சொல்லும்
சித்திநீ சித்தர் சித்தித் திறமுநீ திறமார் மோன
முத்திநீ முத்திக் கான முதலுநீ முதன்மை யான
புத்திநீ யெனக்கொன் றுண்டோ பூரணா னந்த வாழ்வே. (2)

தாயினு மினிய நின்னைச் சரணென வடைந்த நாயேன்
பேயினுங் கடைய னாகிப் பிதற்றுதல் செய்த லன்றே
தீயிடை மெழுகாய் நொந்தேன் றெளிவிலேன் வீணே காலம்
போயின தாற்று இல்லேன் பூரணா னந்த வாழ்வே. (3)

## அரும்பொருள் விளக்கம்.

1. மக்களாய்ப் பிறந்தவர் கைக்கொள்ளவேண்டிய இகபரசுகவாழ் விற்குச் சிறந்த சாதனம் உத்தமமான அறநெறிகளேயாம். அந் நெறிகளோ பல. அவற்றுள் தலைமை பெறுவது ஜீவகாருண்யத்தை விளக்கும் கொல் லாமையாகிற அறமாம். இந்த ஓரறம் நம்மிடத்தில் நிலைபெறுமாயின் ஏனைய அறங்களெல்லாம் நம்மை யெளிதாய்ச் சாரும். அதனாலேதான், பெருந்தேவனாரும் தாம் பாடிய பாரதத்தில்,

"ஆனை யடியில் அடங்கா அடியில்லை
தானதுபோல் நிற்கின்ற தன்மைதான்—ஊனுயிரைக்
கொல்லா அறத்தின் கொழுநிழற்கே யுள்ளடங்கும்
எல்லா அறமும் இசைந்து"

என்றார்.

தாயுமானவரும் மற்றோரிடத்தில்,

'கொல்லா விரதம் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்குஞ் சொல்லுவதென் இச்சை பராபரமே"

"கொல்லா விரதமொன்று கொண்டவரே நல்லோர்மற்
றல்லாதார் யாரோ? அறியேன் பராபரமே"

என்று கூறியிருக்கின்றனர்.

ஆகவே, "இத்துணை ஏற்றம் வாய்ந்த இக்கொல்லாமையாகிற குணம் ஒருவரிடத்திலிருந்தால், அது அநேக நியகுணங்களை அவர் கைப்பற்றுதபடி அவரை நன்னிலையில் நிறுத்தும். அப்பேறு என்னிடத்தில்லாமையாற்றான் நான் கணக்கற்ற கோரமான நடக்கைகளையும், பக்ஷபாதங்களையும், கடின குணங்களையும், கொடியவும் பாழ்படுதற்கேதுவுமான கல்லாமைக் குணங் களையும், அகங்காரம், மனக்குற்றம், நல்விஷயங்களைப் போதிக்கினும் அறிந்துகொள்ளாமை, பயனற்ற கூட்டத்திற் பிரவேசித்தல், வீணான மனோராஜ்யம், இந்திரசாலத்தை யொத்த (நிலையற்ற) சரீரத்தில் பற்றுடை மை முதலிய குணங்களையும் மேற்கொள்ளலானேன். தேவரீருக் கடிமை யாகிய என்னை நீர் இப்படியுங் கெடவிடுவது தர்மமா?" என்று ஆசிரியர் இறைவனை நோக்கி இப்பாடலில் முறையிடுகின்றார்.

குணக்கேடு = துர்க்குணம்.
ஒன்றுதல் = பொருந்துதல்.
பக்ஷபாதம் = நடுநிலைமை கொள்ளாமை.
மனக்கள்ளம் = அகத்தொன்றும் புறத்தொன்றுமா யிருத்தல்.
கதி = மோக்ஷம்.
வாஞ்சை = விருப்பம்.

"அறவினை யாதெனில் கொல்லாமை" என்று திருக்குறளும்,

"கொலையாதி நெறியகன்ற ஞானந் தானே
கூறரிய மேலான ஞான மாகும்
கொலையாதி யகன்றொழுகும் தவங்க டாமே
குற்றமில்லா நற்றவமென் றுரைக்கு நூலும்
கொலையாதி யகற்றியநல் லறங்க டாமே
குவலயத்தி லொப்பரிய வறங்க ளாகும்
கொலையாதி யகன்றபெருஞ் செல்வந் தானே
கூறிலுயிர்க் கிதமான வாழ்வ தாமே" என்று

சிவஞானதீபமும் கூறுவனவும் இங்குக் கவனித்தற் குரியவையாம்.

"அஹிம்ஸா பரமோ தருமம்" என்கிற சுருதிவாக்கியத்தை இப் பாடலா லறிந்துகொள்ளலாகும்.

2. அறிவானும், அறிவிப்பானும், அறிவா யறிகின்றவனும், அறிகின்ற மெய்ப்பொருளும் இறைவனே; அவன் இவ்வாறு பலவாயிருந்து ஆன்மாவுக்கனுக்கிரகம் புரிதலின் அந்த ஆன்ம சம்பந்தமாக உண்டாகும் பத்தி முதலிய வெல்லாமும் அவ்விறைவனே என்றும் தமக்கொன்று முண்டோவென்றும் தாயுமானவர் இதிலுரைக்கின்றார்.

"அறிவானுந் தானே யறிவிப்பான் றானே
அறிவா யறிகின்றான் றானே—அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாச
மப்பொருளுந் தானே யவன்"

என்று அற்புதத் திருவந்தாதி கூறுகின்றது.

"தானே யாகி நிறைந்தெல்லா வுலகு முயிருந் தானேயாய்த்
தானே யானென் பானாகித் தன்னைத் தானே துதித்தெனக்குத்
தேனே பாலே கன்னலே யமுதே திருமா லிருஞ்சோலைக்
கோனே யாகி நின்றொழிந்தா னென்னை முற்று முயிருண்டே"

என்று பிறர் கூறுவதுங் காண்க.

3. உலகில் தாயானவள் தன் புதல்வனுக்கு அவ்வப்போது சரீரத்தில் உண்டாகும் பிணியை யகற்றி யுடலைத் தேற்றுவள். அதுபோல இறைவன் தன்னைச் சரணடைந்த உயிர்களின் சுகத்தைக் கவனிக்கிறானென்று வேதாகமங்கள் சொல்லுகின்றன. "அத் தாயினும் இனியனான உன்னைச் சரணடைந்த வென்னைப் பேயினுங் கடையனாகிப் பிதற்றும்படி வைத்திருத்தல் நல்லதோ?" என்று இதில் முறையிடுகிறார்.

கடையன் = கீழ்ப்பட்டவன்.

பிதற்றல் = உளறுதல்.

தீ = நெருப்பு.

ஆற்றுகில்லேன் = சகிக்கக்கூடாதவனா யிருக்கிறேன்.

# ஆனந்தபோதினி

குரோதன ௵ ஐப்பசி ௴ ௧௨

## உண்மை உணர்தல்.

உண்மை உணர்தலாவது மெய்யுணர் வெனப்படும். அதாவது எப்பொருளினிடத்தும், எப்பிராணியினிடத்தும், எம்மனிதரிடத்தும் உள்ள இயற்கைத் தன்மையை உள்ளவாறே அறிதலாம்.

“ எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு ”

என்றபடி அங்ஙனம் எதனிடத்தும், எவரிடத்தும் உள்ள உண்மைத் தன்மையை உணர்தலே மனிதர்க்கு அறிவுடைமையாம். இவ்வுணர்ச்சியுள்ளார் இம்மையிற் செல்வமும் புகழும்பெற்று மறுமையில் மாறாவின்பத்தை யடைகுவர். இஃதில்லாரின் வாழ்க்கை உலகத்திற் பயனற்றதாம். இவ்வுலகத்தில் எப்பொழுதும் எவ்விடத்தும் நன்மையும் தீமையும் கலந்தேயிருக்கின்றன. மனிதர் பலவகைக் காரணங்களாலும் அவற்றைப் பாகுபாடுசெய்து ஒவ்வொன்றின் இயற்கைத் தன்மைகளையும் ஐயமற ஆராய்ந்து நன்மை இன்னது, தீமையின்னது என்றுணர்ந்து, நன்மையைக் கைக்கொண்டு தீமையை விலக்கவேண்டும். இங்ஙனம் தீமையை நீக்கிச் செய்யத்தக்க நற்கருமங்களைச் செய்து வருவதால் அவர்க்குத் தருமம் கைகூடும்; அத்தர்மத்தினால் நற்கதி நிச்சயமாகக்கிடைக்கும்; அழியாப் புகழும் நிலைத்து விளங்கும். இவ்வாறு பகுத்துணர்தலின்றிக் கண்மூடித்தனமாய் எதையும் செய்யத் தொடங்குவோர்க்குப் பாவகாரியங்கள் அதிகரிக்கும்; அவற்றால் அவகீர்த்தியும் துர்க்கதியும் சித்திக்கும். ஆதலின், மனிதர்க்கு மெய்யுணர்வு இன்றியமையாததாம். அங்ஙனம் மெய்யுணர்ச்சியை எவரும் அடைதற்கனுகூலமாக, உலகத்தில் விரவியிருக்கும் நன்மை தீமைகளில் சிலவற்றையும் அவற்றைப் பகுத்துணர்ந்து செய்வன செய்ய வேண்டு[illegible]களில் சிலவற்றையும் நாம் விளக்குவாம்.

1. சில கோவில்களிலுள்ள அர்ச்சகர்கள், தெய்வங்களுக்கு அர்ச்சனை அபிஷேகாதி நடத்தவேண்டு மென்றும், அவற்றிற்கு ரூபா ஐம்பது செலவு பிடிக்குமென்றும், அந்தத் தொகையைக் கொடுத்தால் அபிஷேகம் முதலியவற்றைத் தாங்களே நடத்தி விடுவதாகவும் பணக்காரரிடம் வந்து கூறுவார்கள். இவர்களில், வாங்கிய பணமுழுவதையும் அவ்விஷயத்திற்கே செலவிட்டுப் பணம் கொடுத்தவர்க்குத் தெய்வ அருள் சித்திக்கும்படி செய்வாருமுண்டு; அந்தப்பணத்தில் சிறிது பாகத்தைச் செலவிட்டு மீதியையோ, ஒன்றும் செய்யாமல் முழுப்பணத்தையுமோ தங்கள் சொந்த உபயோகத்திற்கு எடுத்துக்கொண்டு, பணம் கொடுத்தவர்கட்கு அரையணாச் செலவில் கொஞ்சம் விபூதிபிரசாதம் கொடுத்துப் பூஜாமோசம் செய்வாருமுண்டு. ஆதலின், இவர்களில் உண்மையாகப் பணமுழுவதையும் தெய்வ வழிபாட்டிற் செலவிடுவோரை ஆராய்ந்துணர்ந்து அவர்களிடமே அர்ச்சனைக்குப் பணம் கொடுக்கவேண்டும். ஏமாற்றுவோரிடம் பணங்கொடுப்பதால் பயனின்றிப் பாவமே சாரும்.

2. சிலர், கோவில் கட்டவேண்டு மென்றும், அன்னசத்திரம் அமைக்கவேண்டுமென்றும், தண்ணீர்ப்பந்தல் ஸ்தாபிக்க வேண்டு மென்றும், பாடசாலைகள் வைக்கவேண்டு மென்றும், திருமந்திரம் முதலிய பெருமந்திர நூல்கள் அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டு மென்றும், இவற்றிற்குப் பொருளுதவி செய்தால் மிகப் புண்ணியமுண்டாகு மென்றும் சொல்லிப் பிரபுக்களிடம் பணம் கேட்பார்கள். இவர்களிற் சிலர் உண்மையாகவே வாங்கும் பணத்தைச் செலவிட்டு அத்தருமங்களை நிறைவேற்றுவார்கள். சிலர், பணம் வசூலித்ததற்காகப் பேருக்குமாத்திரம் மேற்குறித்தவைகளிற் சிறிது சிறிது சொற்பப் பணச்செலவில் செய்து காட்டிவிட்டு மீதிப்பணத்தையெல்லாம் தங்களுக்கு ஆஸ்தியாகச் சேர்த்து வைத்துவிடுவார்கள்; இன்னும் சிலர் அத்தருமங்களில் ஒன்றையுமே செய்யாமல் அவற்றிற்கெனப் பலரிடத்தும் வாங்கிய பணத்தையெல்லாம் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் அமிழ்த்தி மறைத்ததுபோல் தங்களுக்குச் சொந்தவைப்புநிதியாகப் பாதாள அறையில் பதுக்கி விடுவார்கள். இப்படித் தர்மப்போர்வையை மேற்போட்டுப் பிறரை வஞ்சித்துப் பிரயாசையின்றிப் பொருள் சேகரித்துப் பெருவாழ்வு வாழ்ந்தொழிவோரை நாம் பிரத்தியக்ஷத்தில் காணலாம். இவர்களுள் உண்மையாகத் தர்மத்திற்குழைப்பாரை நன்காராய்ந்து தெரிந்துகொண்டு அவ

ரிடமே தருமகைங்கரியங்கட்குப் பணங் கொடுக்கவேண்டும். மற்ற தரும மோசககாரருக்கு ஒரு பைசாவும் கொடுத்தல் கூடாது. அங்ஙனங் கொடுப்பது பயனற்றதாகும்.

3. சிலர், தங்கள் மககளுக்குக கலியாணஞ் செய்ய வேண்டுமென்றும, தங்களுககே கலியாணஞ் செய்ய வேண்டுமென்றும், அந்தக் கலியாணச் செலவிற்குத் தங்களிடம் பணமில்லையென்றும், பணங் கொடுத்து அக்கலியாணத்தை நிறைவேற்றி வைத்தால் மிகப் புண்ணிய முண்டாகுமென்றும் சொல்லித் தனவந்தரிடம் பணம் கேட்பார்கள். இவர்களுள் உண்மையாகவே தரித்திரப் பட்டுக் கலியாணச் செலவிற்குப் பொருளில்லாமற் கேட்பாருமுண்டு; தங்களுக்குத் திரவிய மிருக்கும்போதும் கலியாணம் நடத்த வேண்டிய அவசியமே இல்லாதிருக்கும்போதும் மேலும் பொருள் சேர்க்கவேண்டிப் பொய் கூறுவாருமுண்டு. இவர்களில் மெய்யாகவே தரித்திரத்தால் கலியாணஞ் செய்ய முடியாமல் கஷ்டமடைவோரை ஆராய்ந்துணாநது அவாகளுக்கே பொருளுள்ளார் திரவிய சகாயம் செய்யவேண்டும். கலியாணமோசஞ் செய்து பொருள் கவருவோர்க்குக் கடுகளவும் துணைபுரியலாகாது.

4. சிலர், ஒரு கைக்குழந்தையை ஏந்திககொண்டு, 'இக் குழந்தையின் தாய் இறந்துவிட்டாள்; இதற்குப் பால் கொடுத்து இதனை வளர்க்க என்னிடம பொருளின்றி நான் கஷ்டமடைகின்றேன்; ஆதலின் எனக்கேதாவது கொடுத்துதவுங்கள்' என்று யாசகத்திற்கு வருவார்கள். இவர்களில் உண்மையாகவே இந்நிலையை அடைந்து வருபவர்களுமுண்டு; யாரிடமேனும் ஒரு குழந்தையை இரவலாக வாங்கிக்கொண்டு பொய்யான பரிதாபங் காட்டிப் பிறரை ஏமாற்றிச் சுலபமாகப் பொருள்கவர வருவாருமுண்டு. இவ்விரு வகுப்பாரையும் நன்கு ஆராய்ந்து மெய்யாகவே பரிதாபநிலைமையை அடைந்து வருவோரைக் கண்டுபிடித்து அவர்க்கே திரவியசகாயம் செய்யவேண்டும்.

5. சிலர், குசேலரைப்போல மிகககிழிந்த ஆடையைக கட்டிக கொண்டுவந்து வஸ்திரம எடுத்துககொள்ளப் பணம தரவேண்டுமென்று கேட்பார்கள். இப்படி வருவோரில் உண்மையாகவே வஸ்திரமில்லாமல் வருவோருமுளர்; கட்டியிருக்கும் நல்லாடையை அவிழ்த்து வைத்துவிட்டுக் கிழிநத துணியைக கட்டிக்கொண்டு வந்து பாசாங்குசெய்து பணம் வாங்கிக் கெட்ட செலவுக்கு உப

யோகப்படுத்தும் நோக்கத்துடன் வரும் யாசகத்திருடருமுண்டு. இவர்களின் நிலைமைகளை ஐயமறப் பரிசோதித்துணர்ந்து மெய்யாக ஆடையின்றிக் கஷ்டப்படுவோருக்கே உதவி செய்தல்வேண்டும்.

6. சிலர், இடம்பமாக ஆடையாபரணங்களை அணிந்து கொண்டும், சில அழகிய கவிகளை எழுதிக்கொண்டும், மற்ற படிப்பாளிகளை 'அவனுக் கென்னதெரியும் இவனுக் கென்ன தெரியும்' என்று பழித்துக் கொண்டும், படபடப்பாகப் பேசிக்கொண்டும், பற்பல பிரசங்கங்களைப் புரிந்துகொண்டும்வந்து, "நாம் சகல கலைகளும் கற்றுளேம்; எண்ணிறந்த நூல்களை இயற்றி யுள்ளேம்; எம்மைப்போன்ற புலவர் எவருமிரார்" என்று பேசித் தாங்கள் எழுதிக்கொண்டுவந்த கவிகளைக் கெம்பீரமாகப் பாடி எமக்குத் தக்க சன்மானஞ் செய்ய வேண்டுமென்று கேட்பார்கள். இப்படித் தடபுடலாகவரும் பாவலர் நாவலர்களுள் உண்மையாகவே நல்லாசிரியரிடம் முறைப்படி கல்வி கற்றுக் கவிபாடுந்திறம் பெற்றுப் பாட்டுக்களைப் பாடிக்கொண்டு வருவாருமுண்டு. எழுத்துக்களின் பேதங்களைக்கூடத் தெரிந்துகொள்ளாமல், முன்னோர்கள் இயற்றிய அழகியபாடல்களை மனப்பாடஞ் செய்து அவற்றைத் தாங்கள் பாடியதாகவே நடித்துச் சொல்லி வித்வான்களைப்போலப் போலித்தனமாகப் பேசிக்கொண்டு பிறரிடம் பொருள்பறித்துத் துர்வினியோகப்படுத்த வருவாருமுண்டு. இவர்களை நன்றாகப் பரிசோதித்து உண்மையான வித்வான்களுக்கே சன்மானஞ்செய்ய வேண்டும். போலிப் புலவர்க்குப் பணம் கொடுப்பதால் கேலிக்கிடமாகும். அவர்கள் செய்யும் பாவம் பணம் கொடுப்பார்க்கும் வந்து சேரும்.

7. சிலர், பற்பல தெய்வச்சின்னங்களை யணிந்து சிவசிவா, சம்போ, கந்தா, கணநாதா, மகாதேவா, நமோநாராயணா, ஜகன்மாதா, பராசக்தி, மனோன்மணி, ஆதிமூர்த்தி, அடியார்க்கெளியனே என்று தெய்வநாமங்களை உச்சரித்து மிகுந்த கடவுட்பக்தி யுடையவர்களாய் வந்து மகேசுர பூஜைசெய்வதற்குப் பணம்வேண்டுமென்றும், மடம்கட்டப் பணம் வேண்டுமென்றும், அடியாரை—தாசர்களைப் பாதுகாக்கப் பணம் வேண்டுமென்றும் கேட்பார்கள். இப்படி வருவோரில் உண்மையான தெய்வபக்தி யுடையோராய் அவ்விஷயங்களை மெய்யாகவே செய்யவேண்டு மென்னும் கருத்துடன் வருவாருமுண்டு. உள்ளத்தில் சிறிதும் கடவுட் பத்தியின்றிக் கபடமாகப் பக்தர் வேடந்தரித்து அதைக் காட்டிப் பணம்பறித்துக் கஞ்சாவுக்

கும் அபினுக்கும் வேறு துர்ச்செய்கைகளுக்கும் செலவிட்டுப் பக்தி மோசஞ்செய்ய வருவாருமுண்டு. இவர்களுள் உண்மைப் பக்தரை ஆராய்ந்துணர்ந்து அவர்களுக்கே பொருளுதவி செய்தல் புண்ணியமாம்.

8. சிலர், துறவிகளாய் வேதாந்தம் பேசி ஓரிடத்தில் ஆகாரமின்றிப் பத்மாசனத்திருந்து, கண்மூடி மௌனிகளாய் யோகத்தமர்ந்து, ஜனங்கள் தம்மடியில் வீழ்ந்து சேவித்துக் காணிக்கை செலுத்தும்படி விளங்குவார்கள். இவர்களில் மெய்யாகவே இந்நிலை யடைந்திருப்பவர்களுமுண்டு. இரவில் இரகசியமாக ஆகாரமுண்டு பகலில், அதனை அகற்றியிருப்பவர்களைப்போலவும், யோகங்கூடியவர்களைப்போலவும் நடித்து ஜனங்கள் செலுத்தும் காணிக்கைப் பணங்கள் அதிகமாகச் சேர்ந்தபின் அவற்றை அபகரித்துக்கொண்டு ஓடிவிடுகிறவர்களுமுண்டு. இவர்களுள் மெய்யான யோகிகளைத் தெரிந்து அவர்க்குமட்டும் சமாதி முதலியன கட்டுதற்குப் பயனாகும்படி பணவுதவி செய்யவேண்டும். கபட சந்நியாசிகட்குப் பொருளீதல் பயனற்றதாம்.

9. பெரிய தொழில்களை நடத்துவோரிடம் சிலர் சென்று, "உங்களிடமிருக்கும் வேலைக்காரர்கள் சாமர்த்தியமுடையவர்களல்லர்; நாம் எத்தொழிலையும் மிகச் சாமர்த்தியமாகச் செய்வோம்; அவர்களைத் தள்ளிவிட்டு எம்மை வேலைக்கு வைத்து எமக்குத் தகுதியான சம்பளங் கொடுத்துப் பாருங்கள்" என்று அவர்களிடம் நெடுநாட்களாக அனுபோகமாய் வேலைபார்த்து வருவோரை அவ்விடத்தைவிட்டுக் கிளப்பிவிட முயற்சி செய்வார்கள். இவர்களுள் உண்மையாகவே, வேலைத்திறமையுடையவர்களுமுண்டு; ஒருவேலையும் தெரியாமல், வாய்ப்பகட்டால் முன்னிருந்த சாமர்த்தியசாலிகளான உத்தியோகஸ்தரைத் தூக்கிவிட்டு எஜமானனை எய்த்துப் பணம் சம்பாதிப்போருமுண்டு. இவர்களுள் மெய்யான சாமர்த்தியமுடையவர்களைத் தெரிந்து அவர்கள் சொல்லையே நம்பவேண்டும். அப்படி நம்பினாலும் அவர்களுக்கு வேறு வேலை கொடுக்கவேண்டுமே தவிர முந்தின அனுபோகசாலிகளான வேலைக்காரரை நீக்கிவிடலாகாது.

10. பெரும்பான்மையோர் நூதனமாக நல்லவிதத்தில் எழுதப்பட்ட சில புத்தகங்களை வியாபாரிகளிடம் அச்சிடக்கொடுத்து அவற்றிற்காக அதிகப்பணம் கேட்பார்கள். இத்தகைய நூலாசிரி

யர்களில் மெய்யாகவே தங்கள் கல்விச் சாமர்த்தியத்தைக்கொண்டு பிரயாசைப்பட்டுப் புத்தகம் எழுதுவோருமுண்டு. பிறருக்குக் கூலி கொடுத்து அவர்களிடம் விலைக்கோ இலவசமாகவோ எதையாவது எழுதி வாங்கிக்கொண்டுவந்து தந்திரமாகப் பணத்தைக் கவர நினைப் பவர்களுமுண்டு. இத்தகைய நூலாசிரியர்களில் உண்மையான ஆசிரியர்கள் எவரென்றுணர்ந்து அவர்கள் கொண்டுவரும் நூலுக்கே பணம் கொடுக்கவேண்டும்.

11. வியாபாரிகளிடம் மனிதர் பணம்கொடுத்து எதையாவது வாங்கும்போது, விலை அதிகமென்று எதாவது வார்த்தைபேசத் தொடங்கினால், அவ்வியாபாரிகள், "ஐயா! உங்களிடம் நான் பொய் கூறுவேனா ? உங்களிடம்தானா அதிகவிலை வாங்குவேன்; நம்மா என் சொல்லை நம்பி இதை வாங்கிச் செல்லுங்கள் ; வித்தியாசமொன்று மிராது" என்று கூறித் தாங்கள் கொடுக்கும் சாக்கை வாங்கிக் கொண்டு போகும்படி செய்வார்கள். இத்தகைய வியாபாரிகளில் உண்மை கூறுவோரு முண்டு. ஒன்றுக்குப்பத்து விலையேற்றிப் பசப்புவார்த்தை பேசிப் பிறரை வஞ்சித்து அவரிடம் பொருள் கவருவாருமுண்டு. ஆதலின், இவர்களில் உண்மையான வியாபாரி களைத் தெளிந்து அவர்களுடைய சொல்லில் மாத்திரமே நம்பிக்கை வைக்கவேண்டும்.

12. சிலர், "எமக்குப் பத்துரூபா அனுப்புகிறவர்களுக்குப் பிழைக்கும்வழி காட்டுகிறோம்" என்று பத்திரிகையில் விளம்பரம் செய்வார்கள். இவர்களுள் உண்மையாகவே ரூபாயைப் பெற்றுக் கொண்டு ஏதேனும் நன்மார்க்கம் காட்டுகிறவர்களு முண்டு; பணத் தைப்பலரிடம் ஏமாற்றிக் கைப்பற்றிக்கொண்டு பணங்கொடுத் தோர் மனம் புண்ணாகும்படி ஏதேனும் உபயோகமற்ற விஷயத்தை அவர்களுக்கு உரைத்து மோசஞ்செய்வாருமுண்டு. இத்தகைய காரியங்களில் உண்மையான விளம்பரம் செய்வோரைக் கண்டுபிடி த்து அவர்களுக்கே பணம் கொடுக்கவேண்டும். (இவ்விஷயத்தைப் பற்றி இச்சஞ்சிகையின் மற்றொருபக்கத்தில் ஒரு வியாசம் பிரசுரிக் கப்பட்டிருக்கிறது. அதனையும் நண்பர்கள் கவனிப்பாராக).

13. சிலர் வந்து, "நான் வைத்தியத்தில் மகா நிபுணன்; எனக்கு நூறு ரூபா கொடுத்தால் உங்களுக்கு வியாதியே வாராமல் செய்துவிடுகிறேன்" என்று கூறுவார்கள். இவர்களுள் மெய்யா கவே அவ்வாறு செய்யக்கூடியவர்களுமுண்டு; எதையாவது செய்து

கொடுத்துவிட்டுப் பணத்தைப் பாக்கெட்டில் போட்டுக்கொண்டு கம்பி நீட்டுவாருமுண்டு. இவர்களில் உண்மையான பண்டிதர்களைக் கண்டு அவர்களிடமே பணம் கொடுக்கவேண்டும்.

14. இன்னும் பலர்வந்து, "சோதிடசாஸ்திரத்தில் நாம் மிகத் தேர்ச்சியடைந் திருக்கிறோம்; பல மடாதிபதிகளிடத்தும், ஜமீன் தார்களிடத்தும், பிரபுக்களிடத்தும் மெடல் தோடா பரிசுபெற்றி ருக்கின்றோம்; சில மடங்களிலிருந்து நமக்கு அபிமானச் சம்பளம் வருகின்றது; எமக்கு ஐம்பது ரூபா கொடுத்தால் உங்களுடைய ஜாத கத்தை நன்றாகக் கணித்துப் பலாபலன்களைத் தெளிவாக ஆராய்ந்து சொல்வோம்" என்று கூறுவார்கள். இவர்களுள் உண்மையாகவே சோதிடத்தில் உழைத்து நிபுணத்துவம் பெற்றவர்களுமுண்டு; ஒரு விஷயமும் தெரியாமல் இடம்பமாகப் பேசி ஏமாற்றிப் பணத்தைக் கைப்பற்றிக்கொண்டு ஏதையாவது எழுதிக்கொடுத்து விட்டு ஓட் டம்பிடிப்பாரு முண்டு. இவர்களுள் உண்மையான சோதிடர்களைக் கண்டு அவர்களுக்கே பணம்கொடுக்க வேண்டும்.

15. சிலர், கௌரவமான உடையணிந்து, மதிப்பான வார்த் தைகளைப்பேசி, "எங்களிடம் உங்கள் பணங்களைக் கொடுத்துவை யுங்கள்; நாங்கள் காப்பாற்றி வைத்திருந்து உங்களுக்கு வேண்டிய போது தருகிறோம்" என்று கூறுவார்கள். இவர்களுள் உண்மை யாகவே நாணயமிக்க பெரியமனிதர்களு முண்டு; பெரியமனிதர்க ளைப்போல வேடமிட்டு ஏழைகள் பணத்தை ஏமாற்றிக் கவர்ந்து வாயிற் போட்டுக்கொள்ளும் மாபாவிகளு முண்டு. இப்படிச் சொல் பவர்களில் சத்தியவந்தர்களாகிய பெரிய மனிதர்களைத் தெரிந்து அவர்களிடமே பொருளைக் கொடுத்து வைக்கவேண்டும்.

16. சிலர், "எங்களோடு புறநாடுகளுக்கு வந்தால் அங்கே உங்களுக்கு அநேகம் சௌகரியங்களைத் தேடிவைப்போம்" என்று ஜனங்களை அழைப்பார்கள். இவர்களில் மெய்யாகவே பொது நன் மைக்குப் பாடுபடுகிறவர்களு முண்டு; ஜனங்களுக்கு ஆசைவார்த் தைசொல்லி அவர்களைக் கப்பலேற்றி அன்னிய தேசங்களுக்குக் கொண்டுபோய்த் தாங்கள் பணம்சம்பாதிக்கும் பொருட்டுப் பல சங் கடங்களில் மாட்டிவைத்து விடுவோருமுண்டு. இத்தகையவர்களில் உண்மையான பொதுஜனோபகாரிகளையே நம்பவேண்டும்.

இங்குக் காட்டியவாறு உலகத்தில் பற்பலவகைகளிலும் எண் ணத்தொலையாத விஷயங்க ளிருக்கின்றன; அவற்றிலெல்லாம் நல்

லாரோடு பொல்லாரும் கலந்தே யிருக்கின்றார்கள். அத்தனை வகுப்பாரையும் இங்கெடுத்தெழுதுவது சாத்தியப்படாது. மனிதர் அனுபவத்தில் அன்னோரை எந்நாளிலும் கண்டுகொள்ளலாம். இவர்களுள் பொல்லாரை நீக்கி நல்லார்க்கு நலம் புரிவதே தகுதியாயிருந்தும், சாஸ்திரங்களும் அவ்வாறே கூறியும், பெரும்பான்மையோர் பகுத்துணருந் தன்மை யின்மையாலும், வேறு சில அபிப்பிராய பேதங்களாலும் எல்லா விடங்களிலும் பொருளீதல், கௌரவம் கொடுத்தல் முதலிய காரியங்களைச் செய்து வருகிறார்கள். சிலர், "தெய்வ சின்னங்களைத் தாங்கியவர்கள் எவ்வளவு துர்க்குண முடையவர்களாயிருந்தாலும் அவர்களை உயர்ந்தவராகவே நினைக்கவேண்டுமென்று பெரியோர்கள் கூறியிருக்கின்றார்கள்; யாராயிருந்தாலும் இல்லை யென்றிரப்பார்க்கில்லை யென்னாமல் ஈவதே தருமம் என்று சான்றோர் சாற்றுகிறார்கள்; ஆதலின், எல்லோருக்குமே அவரவர்களுடைய விருப்பந்தீரும் உதவிகளைச் செய்தலே சிறந்ததாகும்" என்று ஒரு குருட்டு நம்பிக்கை வைத்துப் பாகுபாடின்றி எல்லா விடங்களிலும் பொருட்செலவு செய்கின்றார்கள். எல்லாவற்றையும் துறந்து தெய்வசிந்தனையைமட்டும் குறித்த ஞானிகள், பார்க்குமிடங்களிலெல்லாம் தெய்வபாவனையே செய்வார்கள். அத்தகையவர்கள், தெய்வ சின்னங்களை யுடையவர்கள் எத்தகையரா யிருந்தாலும், 'அவரே யாம் வணங்குங் கடவுளாவார்' என்று தங்கள் நிலைக்குத் தக்கவாறு உரைத்தார்கள். அதனால், உலகத்தை ஏமாற்றும் நடிப்புக்காரர்களை யெல்லாம் லௌகீகத்திலுள்ளவர்கள் கௌரவிக்க வேண்டுமென்பது கருத்தன்று. இல்லையென்றிரப்பார்க்கில்லை யென்று சொல்லக்கூடாதென்றது, உண்மையாகவே பொருளில்லாமல் யாசிப்பவர்களைக் குறித்துச் சொன்னதேயன்றி, உள்ள பொருளை மறைத்துவிட்டு மேலும் பொருள் சேகரிக்க யாசகர் வேடமிட்டுவரும் மோசக்காரரைக் குறித்தன்று. இந்த உண்மைகளை உணராமல் சிலர் தப்பபிப்பிராயங்கொண்டு செய்யத்தகாதன செய்கிறார்கள். இந்தக் குறுக்கு நீதியானது, தற்காலத்தில் நூதன ஞானங்கற்ற சிலர், "மனிதர் இழிவான காரியங்களைச் செய்தாலும் அவர்களை நிந்தித்துக் கண்டித்தல் கூடாது" என்று பத்திரிகைகளிலும், நூல்களிலும் எழுதிப் பிரசங்கங்களிலும் சொல்லுவதுபோன்றிருக்கின்றது.

இங்ஙனம் நம் நாட்டில் அன்னிய நாட்டு விபரீத ஞானம் பரவியதால் பெரும்பான்மையோர், நல்லவர் கெட்டவர் என்ற பாகு

பாடின்றி எல்லாரிடத்தும் தானதர்மம், கௌரவம் முதலியவற்றைச் செய்துவருவதால் நடிப்புக்காரர்கள் நலம்பெறுகின்றார்கள்; உண்மையாளர்கள் கௌரவமிழந்து துன்புறுகின்றார்கள்; தர்மங் குறைந்து அதர்மந் தலையெடுக்கின்றது. நற்காரியங்களைப் புரிவோர்க்கும் அதற்குரிய பயன்கிடைக்காமல் தீமைக்கிடமாகின்றது. ஆதலின், இம்மை மறுமைப் பயன்களை யடையவிரும்புவோர், ஒவ்வொரு விஷயத்திலுமுள்ள நன்மை தீமைகளைப் பகுத்துணர்ந்து நன்மையையே செய்துவர விரும்புகிறோம். சிலர், அவ்வாறு செய்தற்கு மனிதரின் இயற்கைக் குணங்களை எவ்வாறு உணர்தல் முடியும் என்று சொல்லக்கூடும். அஃதவ்வளவு முடியாத காரியமன்று. ஒரு மனிதனுடைய தோற்றத்தாலும், வார்த்தையாலும், நடக்கையாலும் அவனுடைய உண்மைத் தன்மையை எளிதில் உணர்ந்து கொள்ளலாம். இவ்வாறு எல்லோரும் அறிந்து உண்மையாளர்க்குதவிபுரியுமாறு எல்லாம்வல்ல இறைவன் திருவருள்புரிவானாக.

ஓம் தத் ஸத்.

---

## "புலால் மறுத்தல்"

"கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா வுயிருந் தொழும்" (குறள்)

சகோதர சகோதரிகளே! கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட நாலுவகை யோனி எழுவகைப் பிறப்பிலடங்கிய எண்பத்து நான்கு லக்ஷம் ஜீவராசிகளுக்குள் ஆறறிவோடுகூடிய மானிடப் பிறவியே சாலச் சிறந்தது. இம் மானிடப் பிறவிகளுக்குத்தான் நன்மை இன்னது, பாவம் இன்னது இவைகளைச் செய்யலாம் இவைகளைச் செய்யக்கூடாது என்று செய்யுமுன் ஒவ்வொன்றையும் நன்கு ஆராய்ந்துகொள்ளும் பகுத்தறிவு ஏற்பட்டிருக்கிறது. மனிதர்களுக்குப் பகுத்தறிவு இல்லையேல் அவர்களை ஐயறிவோடு கூடிய மிருகவர்க்கத்திற்கு ஒப்படைக்க வேண்டுமென்று பெரியார் கூறுவர்;

"தக்கவின்ன தகாதன இன்னவென்
றொக்க வுன்னல ராயி னுயர்ந்துள
மக்க ளும்விலங் கேமனு வின்னெறி
புக்க வேலவ் விலங்கும்புத் தேளிரே." (இராமாவதாரம்)

சாத்வீக குணமற்ற மனிதர்கள் மனமிரக்கமின்றி அநேகமான ஆடுகளையும், கோழிகளையும், பன்றிகளையும் பிடித்துக் கொன்று தின்று வயிறு வளர்ப்பார்கள். ஐயோ பாவம்! இவர்களும் மனிதர்கள்தாமோ? இவர்களுக்கும் உயர்வு தாழ்வு வேண்டுமோ? என்னே அநீதம்! சிறு மாமிசம் தின்பவர்கள் சிறியவர்களாம். பெரிய மாமிசம் தின்பவர்கள் பெரியவர்களாம்.

என்னே இவர்களின் கூற்று. கடவுள் எங்கும் நிறைந்துள்ளார். அவரில் லாத இடமேயில்லை. அவர் பாலில் நெய்போலும், பழத்தில் இரசத்தைப் போலும், எள்ளில் எண்ணெய்போலும் எல்லாவித ஜீவராசிகளின் ஹிரு தயங்களிலும் கலந்துள்ளார் என்று இவர்கள் தெரிந்துகொள்ளாததுதான் என்னே !

"எவ்வுலகும் பராபரன்சந் நிதியதாகு
மிலங்குமுயிருடலனைத்தும் ஈசன்கோயில்
எவ்வுயிரும் எம்முயிர்போ லென்று நோக்கி
யிரங்காது கொன்றருந்தும் இழிவினோரை ... ..."

என்றும், (சிவஞானதீபம்.)

"........உயிருடம்பைக் கடித்துண்ணுங் கருத்தனேலெங்
குருவாணையெமது சிவக்கொழுந்தாணை ஞானியெனக்கூறொணுதே"

என்றும், (அருட்பா)

"பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாரும் காண வியமன்றன் றூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகிடை
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே"—(திருமந்திரம்)

என்றும் பெரியார் கூறுகின்றனர்.

அறிவிற் சிறந்த நண்பர்காள்! ஒருவன் மற்றொருவனைச் சுறுக்கென்று ஊசியினால் குத்தினால் அவன் சும்மாவிருப்பானு? உடனே அவன் தன்னைக் குத்தினவன் கன்னத்தில் பளீரென்று அறையவருவான் அல்லவா? இந்த ஆடு,மாடு, கோழி, பன்றி இவைகளை ஹிம்சைசெய்தால் அவைகள் யாரிடம் போய் முறையிடும். ஒருகாலத்தில் மாண்டவிய முனிவர் சிறு பிள்ளையா யிருந்தபோது விளையாட்டாக ஒரு தட்டானை (பூச்சி)ப் பிடித்து ஒரு முள்ளினால் குத்திப் பறக்கவிட்டு வேடிக்கைபார்த்தார். அவரைப் பிற்காலத்தில் அப்பாபம் விடாது தொடர அவர் தட்டானைப்போல் கழுமரத்தில் மிகவும் கஷ்டப்பட்டனரென்றால் இத்தனை ஆடு, மாடு, கோழி, பன்றி தின்பவர்களின் கதி என்னுமோ அறியோம் ! கீழ்வரும் கவிகளையும் நோக்குக.

"அம்மா என அலற ஆருயிரைக் கொன்றருந்தி
இம்மானிடரெல்லாம் இன்புற்றிருக்கின்றார்
அம்மா எனும் சத்தம் கேட்டகன்ற மாதவர்க்கும்
பொய்ம்மா நிரையமென்றால் புசித்தவர்க்கு என்சொல்வதே"

(வள்ளலார்)

"பறையரைப் பறையரென்று பறைந்திடு மனிதர்கேளீர்
பறையர்தம் மலத்தைத் தின்ற பன்றியைப் புசிப்பதென்னே
கறையதே யாகுமந்தக் கறிதனைக் கலத்தி விட்டு
மறையவே வைத்துத் தின்ற மனிதரே பறையர்கண்டீர்"

(தனிப்பாடல்)

சகோதர சகோதரிகளே! இச்சத்விஷயங்களைப் பன்முறையுமிடித் திடித்துரைப்பினும் நன்மை பயக்குமன்றோ! ஒருகாலத்தில் சிபிச்சக்கிர வர்த்தி ஒரு புறவுக்காகத் தன் உடல் முழுவதையும் கொடுத்தார். ஒரு பசுவின் கன்றைக் கொன்ற புதல்வனென்று மனுச்சோழன் தன் மகனைத் தேர்க்காலிற் கிடத்தினன். தருமராஜர் வைகுந்தம் செல்லும்போது தன்னோடு வந்த ஒரு புழுத்த நாயைத் தூக்கித் தன் மார்போடு தாங்கி எடுத்துச் சென்றார். "புலையும் கொலையும் களவும் தவிர்", "நோன்பு என்பது கொன்று தின்னாமை" என்ற அரிய திருவாக்கைச் சிறிது கவனியுங்கள். நாம் எவ்வுயிர்களையும் நமது சகோதரமாகப் பாவித்து அவைகளை வருத்தமின்றிக் காப்பாற்றவேண்டும். எல்லாம்வல்ல பரம்பொருள் முன்னின்று ரக்ஷிப்பாராக!

S. V. பழனியப்ப பிள்ளை,
சாலியாபாளையம், கரூர்.

---

## நாலடியார் வசனம்

(81-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 25-ம் அதிகாரம்—அறிவுடைமை.

வருந்துதலில்லாத வலிமையையுடைய (இராகுவென்னும்) பாம்பானது, சந்திரனை (அது) இளம்பிறையா யிருக்கும்பொழுது பிடிப்பதில்லை. (அதுபோல) அறிவுடையார் தம் பகைவர் தாழ்ந்த நிலையை யடைந்திருக்குஞ் சமயம் பார்த்து, தாங்கள் அவர்களுக் கிரங்கி (வெல்வதற்கு) அச்சமயத்தில் அவரிடம் போகமாட்டார்கள். (1)

பெரிய கடலின் குளிர்ந்த கரையையுடைய பாண்டியனே! தரித்திர நிலைமையை அடைந்துள்ள மனிதர்களுக்கு ஆபரணமாவது அடக்கமேயாம். (அவ்வாறின்றி ஒருவன்) அடங்குதலில்லாத உயர்ந்த தன்மையுடனே நடப்பானானால் அவன் வசிக்கும் ஊரிலுள்ளவர் யாவராலும் (அவனது) குலம் பழிக்கப்படும். (அவன் தன் குலத்திற்குப் பழிப்பை யுண்டாக்குவான்.) (2)

எந்த நிலத்தில் விதைத்தாலும் எட்டிவிதை தென்னமரமாகாது. (எமன் திசையாகிய) தென்திசையி லுள்ளவர்களும் தருமகாரியங்களைச் செய்து சுவர்க்கத்திற் பிரவேசிப்பார்கள். ஆதலால் தனது தருமகாரியத்தாலேயே மறுமைக்கதி கிடைக்கும். வடக்குத் திக்கிலும் (நற்கதிபெற முயலாமல்) வீண்காலம் கழிப்பவர்களுமுண்டு. (3)

வாழைப்பழமானது வேப்பிலையில் பழுத்தாலும் தன் இனிய மதுரத்தில் சிறிதும் மாறுபடாது. அதுபோல, (இயல்பாகவே) நற்குணமுடையோர் தீய இனத்தாரோடு சேர்ந்திருந்தாலும் (அவருடைய) மனம் கொடிய தன்மையை யடைவதில்லை. (4)

அலைகளை வீசும்படியான கடலின் குளிர்ந்த கரையையடுத்த நாட்டையுடையவனே! (உப்பு நிறைந்த நீர்பொருந்திய) கடலுக்கருகிலும் நல்ல நீர்

உண்டாகும். மலைசார்ந்த விடத்திலும் உப்பு மிகுந்த உவர் நீர் உண்டாகும். ஆதலால் மனிதர்கள் (தமது குணம் செயல்களில்) தங்கள் தங்கள் மனத்தாலொத்தவ ரல்லது இனத்தாரை ஒத்தவரல்லர். (5)

பருத்த அடிப்பாகங்களை யுடைய புன்னை மரங்களுள்ள கடற்கரையை யுடையவனே! (ஒரே நிலையில் உறுதியாய்) நிற்கும் மனமுடையவர்கள் நற்குணங்கள் பொருந்திய செய்கையை யுடையவரிடத்திலும் நீங்குதலும் கூடுதலுமாகிய காரியங்களைச் செய்வார்களோ? (அவ்வாறு செய்தலினும்) ஒருவருடனும் கலந்து சிநேகஞ் செய்யாதிருத்தலே நல்லது. (6)

சிநேகஞ் செய்தறிவதனுல் சிநேகத்தின் தன்மையை யறிந்துகொள்ளும்படியான அறிவுடையோரை நட்பாகக்கொள்ளுதலாலே பலவித இன்பங்களுண்டாகும். (ஆராயாமல்) சிநேகஞ்செய்தால், சிநேகஞ் செய்தறிவதனுல் சிநேகநிலை தெரியும்படியான அறிவிலாதாரை (உடனே) விட்டுப் பிரிவதனுல் துன்பமானது நீங்கும். (7)

தன்னை நல்ல நிலையிலே நிற்கச் செய்பவனும், அந்நிலைகெடச் செய்து தன்னைக் கீழாக்கிக்கொள்பவனும், (தான்) முன்னிருந்த நிலைமையினும் மேலும் மேலும் உயரும்படியாகச் செய்து (அந்நிலையிலேயே) தன்னை நிறுத்திக்கொள்பவனும், தன்னை முதன்மையானவனுகச் செய்துகொள்பவனும் தானேயாவன். (ஒருவன் தனது உயர்விற்கும் தாழ்விற்கும் தானே காரணனுகின்றுன் என்பது கருத்தாம். "தானே தனக்குப் பகைவனும் நட்டானும்", "பெருமையும் சிறுமையும் தான்தர வருமே" என்னும் வாக்கியங்களும் இங்கு உணரத்தக்கவையாம்.) (8)

அலைகள் மிகவும் சப்திக்கும் குளிர்ந்த கடற்கரையை யுடைய பாண்டிய மன்னனே! சிறந்த குலத்திற் பிறந்த பெருமையுடைய அறிவாளிகளும் (யாதாமொரு) காரியத்தினிமித்தம் கல்வியறிவில்லாதவர்களின் பின்னுகச் செல்லுதல் அவிவேகமல்ல; அவ்வாறு செல்வது அறிவுடைமையேயாம். ()

(ஒருவன், அறத்திற்கும் பொருளுக்கும் காரணமான) தொழில்களையும் உடன்பட்டுச் செய்து, உலக இன்பங்களையும் அநுபவித்து, தருமத்தையும் தகுந்த பெரியோர்களுக்குச் செய்து (இவ்வாறு) மூன்று காரியங்களும் ஒரு பிறவியிலேயே (ஒருவனுக்குத்) தடையில்லாமல் நிறைவேறுமானுல், அந்த நிலைமையானது (அன்னியநாடுகளுக்குப்போய் வியாபாரம் செய்து லாபத்தோடு திரும்பவும் தன்னுடைய) பட்டினத்தை யடைந்த மரக்கலத்திற்குச் சமானமானதாகும் என்று கூறுவர் பெரியோர். (10)

## 26-ம் அதிகாரம்--அறிவின்மை.

(ஒருவனுக்கு) கூரிய அறிவு இல்லாமலிருத்தலே தரித்திரமாகும். அந்த அறிவைப் பெற்றிருத்தலே மிகவும் வளர்ந்த செல்வமாம். ஆராயுமிடத்து, பெண்தன்மை மிகுந்து ஆண்தன்மை குறையப்பெற்ற பேடியானவள் யாவர் கண்களும் காண விரும்பத்தகுந்த ஆபரணங்களை அணியமாட்

டாளோ? அணிவாள். (அறிவில்லான் செல்வத்தைப் பெற்றிருத்தல் பேடி அழகிய ஆபரணமணிந்திருத்தல் போன்றதாம்.) (1)

பலவிதமாகிய நிறைந்த நூற்கேள்விகளின் பயனை அறிந்தவர்கள் (வறுமையால்) தம்பெருமைகெட்டுத் துன்பத்தால் வருந்துவதின் காரணத்தையறிய (நீங்கள்) விரும்பினால் (சொல்வேன்.) பழைய சிறப்பினையுடைய சரஸ்வதிதேவி (அப்புலவர்களின் நாவில்) வாசம் பண்ணுதலால், செந்தாமரை மலரில் வசிப்பவளாகிய ஸ்ரீ மகா லக்ஷ்மி கோபங்கொண்டு (அவர்களிடம்) சேரமாட்டாள். (மாமிக்கும் மருகிக்கும் ஒற்றுமை இடையாதென்பது உலகப்பிரசித்தம். இலக்குமி மாமியும் சரஸ்வதி மருகியுமா யிருத்தலால் ஒருவர் இருக்கும் இடத்தில் மற்றொருவரிருக்கமாட்டார்.) (2)

தந்தையானவன் (பிள்ளையைப்பார்த்து) "அப்பா நூல்களைச் செவ்வையாகப் படித்துக் கல்வியைக் கற்றுக்கொள்" என்று வற்புறுத்திக் கூற, அவ்வார்த்தையை ஒரு பொருளாகக் கொள்ளாமல் பழித்தவனது கையில் ஒருவன் ஒரு கடிதத்தைப் படித்துக் காட்டு என்று பலபேர் முன்னிலையில் மெல்ல நீட்ட (அவன்) கோபங்கொண்டு கெடுதியாக (அவனை) அடிப்பதற்குத் தடியை எடுத்துக்கொள்வான். (3)

கல்வி கற்காமல் வளர்ந்த ஒருவன் உலகத்தில் நல்ல அறிவுள்ளவர்கள் (கூடியிருக்கும்) கூட்டத்தின் நடுவில் புகுந்து மெல்ல இருந்தாலும் நாய் இருந்தாற்போன்றதாம். (யாதாமொன்றைச்) சொன்னாலும் நாய் குரைத்தாற்போன்றதாம். (4)

கீழ்மக்கள் (இலக்கணத்தோடு) பொருந்தாத இழிவாகிய சபையில் கூடியுள்ள (கல்வியறிவு இல்லாத அற்ப) புலவர்களின் நடுவே புகுந்து (தாம்) கல்லாதவற்றை யெல்லாம் சொல்லுவர். பெரியோர்களெல்லாம் தாம் கற்ற விஷயங்களை(ச் சொல்லும்படி பிறர்) கேட்டாலும், (அவர்களறிவு தாம் கூறும் அருமையான) பொருளின்மேல் முழுதும் செல்லாமல் நீங்கிப்போகும் விதத்தை அறிந்து (அவர்களால் கிரகிக்கமுடியாதென்பதையறிந்து) சொல்லமாட்டார்கள். (5)

பனைமரத்தின்மேலுள்ள உலர்ந்த ஓலையானது (சாரமற்றதாகையால்) 'கலகல' வென்று சப்திக்கும். பச்சோலைக்கு எப்பொழுதும் (அவ்வித) சப்தமில்லை. (அதுபோல) (நூல்களைக்) கற்றறிந்த நாவினையுடையோர் (தாம் சொல்லும் சொற்களில்) தமக்கு ஏதாவது பிழை நேரிடுமோ என்று பயந்து ஒன்றும் சொல்லாமலிருப்பர். அறிவில்லாத சிறியோர் (அப்படிப்பட்ட குற்றத்திற்குப் பயப்படாமல் கண்டபடி) பேசுவர். (6)

பன்றிக்குக் கூழ்வார்க்கும் தொட்டியில் தேன்பொருந்திய மாம்பழத்தின் ரசத்தைப் பிழிந்தாற்போல, நன்மையை யறியாத மனிதர்க்குத் தரும மார்க்கத்தைச் சொல்லுமிடத்து மலைமேல் அடிக்கப்படும் கட்டுத்தறி போலத் தலை சிதறி காதிற்குள் ஏறுவாம். (மரமுளையைக் கற்பாறையின் மேல் அடித்தால் அம்முளை பாறைக்குள் இறங்காமற்போவதோடு அதன்

முனையும் சிதைந்துபோவதுபோல, மூடர்களுக்குத் தருமோபதேசஞ் செய்வதும் பயனற்றதாக முடியும் என்பது கருத்தாம்.) (7)

(அடுப்புக்) கரியைப் பலநாளளவும் பால்வார்த்துக் கழுவி உலர்த்தி வைத்தாலும் (அதனிடத்தில்) வெண்ணிறத்தையுடையதானதொரு பாகம் உண்டாகமாட்டாது. (சிறிதும் வெண்மையாகாது.) (அதுபோல) கோலினால் அடித்துக் குத்திச் சொன்னாலும் முற்பிறப்பில் நல்வினை செய்யாத (உயிரையுடைய) உடம்பிற்கு அறிவு நுழையாது. (8)

தேனைச் சொரிந்து இனிமையாக நல்ல வாசனை வீசினாலும் பூவிலுள்ள தேனை உண்ணப்போகாமல் (துர்க்கந்தமுள்ள) இழிவான பொருளையே விரும்பும் ஈயைப்போல, இழிவாகிய செய்கைகள் பொருந்திய மனமுடையார்க்குப் பெரியோர் வாயிலிருந்து வரும் தேன் கலந்தாற்போன்ற தெளிவையுண்டாக்கும் உறுதிமொழிகளினுடைய தெளிவு (சாரமான நீதிகள்) யாது பயன்படும்? (9)

கற்றவர்கள் கூறும் குற்றமற்ற நுட்பமான நூற்கேள்விகளை ஏற்றுக் கொள்ளாமல் தன்மனம் தள்ளிவிடுவதால், கீழ்மகன் பின்னும் தன்போன்ற ஒருவன் முகம்பார்த்து தானுமொரு இழிவான பிரசங்கம் செய்வான். (10)

(தொடரும்.) பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

## தமிழினருமை.

[நாளிது, தைத்திங்கள் 14-ம்தேதி, ஓமலூர் "சன்மார்க்க சங்"கத்தில் நிகழ்த்திய சொற்பொழிவின் திரட்டு]

### மொழி.

"தேசங்கள் தோறும் பாஷைகள் வேறு" என்றபடி, உலகிலுள்ள மாந்தர்கள் தத்தம் உள்ளக் குறிப்பினைப் பிறருக்கறிவிக்குங் குறிப்பொலியே பல் வேறிடங்களிலும் பல்வேறு பாஷைகளாய் வழங்கி வருகின்றதென்பர் அறிஞர். இப்பலதிறப்பட்ட பாஷைகள் ஏற்படாமுன்னம், உலகின் மக்களனைவரும் கைச்சைகைகளாலும், மற்று, அபிநயங்களாலுமே பிறர் பிறருணர்வினை யறிந்தனர் என்பது ஆராய்ச்சியாளர் கொள்கை. இஃதிங்ஙனமாக,

பல்திறப்பட்ட மொழிகளினுள்ளே மிகப்பழமையானவை இரண்டே பாஷைகளென்பர் ஆராய்ச்சியாளர். இவ்விரு மொழிகளும் இறைவனால் உண்டாக்கப் பெற்றன என்பது புராண அபிமதம். இக்கடவுண் மொழிகள் முறையே சமஸ்கிருதமும் தமிழுமாம். இவை, வட இந்தியர்கள் வழங்குவதால் வடமொழி என்றும், தென்னிந்தியர்கள் வழங்குவதால் தென்மொழியென்றும் முறையே பெயர்பெற்றன. ஏனைய உரியா, வங்காளி, இந்தி முத

விய பாஷைகள் வடமொழித் தாதுவினின்று பிறந்தன வென்றும், மற்றைய தெலுங்கு, கன்னடம், மலையாளம்முதலியன தென்மொழியாம் தமிழினின்றும் தோன்றிய பிரிவுப் பாஷைகளென்றும் கூறப்படும். எங்ஙனமாயினும் தாய்ப்பாஷைகள் அவ்விரண்டு முதுமொழி (பாஷை) களே என்பது தேற்றமாகின்றது. நிற்க, இங்கு நாம் தென்னாட்டவராகலின், தென்மொழியாகிய நமது தமிழ்ப்பாஷையின் உயர்தனி வளத்தைச் சிறிது ஆராய்வது அவசியமாம்.

## எழுத்தாக்கம்.

நமது மூதாதைகள், தங்களருமைக் குழந்தைகளாகிய நம்மீது காட்டிப் போன பேரன்பு நந்தம் தமிழ்மொழி எழுத்துக்களை நோக்கினால் தெளிவாகும். நமது பெரியோர்கள், பிறர் வருத்தஞ் சகியாப் பேரறிவாளர் என்பதும் வெள்ளிடைமலைபோல் விளங்குகின்றது. எவ்வாறெனில்:—அவர், வழி நடக்கும் பிரயாணிகள், தங்கள் தங்களின் நடையலுப் பொழித்துக் களை தீர்த்துக்கொள்ளும்பொருட்டு வழிமுழுதும் ஆங்காங்கே தங்குமிடங்களும், நிழலமைதிகளும், ஏனை வசதிகளும் செய்திருப்பது போலவே, தம்மக்களாகிய நாமும் நமது சந்ததிச் சிறார்களும் பேச்சு மாத்திரையிலும்—என்?—மூச்சுமாத்திரையிலுங்கூட சிறிதும் சிரமம் அடையாவண்ணம், அத்துணை நயமாகவும் அருமையாகவும் நம்மைப் பாராட்டி, அமுதனைய தமிழினைப் புகட்ட நேர்ந்தனர் என்பதைத் தமிழ்மொழி எழுத்துக்களிலே நன்கு காணலாம். பாருங்கள்! அந்தோ! குழந்தை சிரமமடைந்து விட்டானே என்ற குறிப்புவிளங்கச் சற்று மூச்சையிறுக்கி "அ" என உச்சரிக்குமாறு முதலில் அகரத்தையும், சிரமசாந்தி செய்விப்பது போன்று ஆறுதலளிக்குந் தன்மையில், நெட்டுயிர்ப்பில் "ஆ" என்னும் குறிப்புவிளங்க இரண்டாவது ஆகாரத்தையும் அமைத்திருக்கின்றார்கள். இப்படியே உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டனையும் நோக்குங்கள்! மூச்சைக் குறுக்கி யுச்சரிப்பவை ஐந்தும் தாராளமாக உச்சரிக்கலானவை ஏழுமாகவைத்திருக்கின்றார்கள். இதனால் நமது பெரியோர் எவ்வளவு அருமையாக நமக்கு நமது மொழியினை ஊட்டியிருக்கின்றார்கள் என்பதும், நமக்கு ஒரு அணுத்துணையேனும் சிரமம் நேராதபடி கவனித்து வந்திருக்கின்றார்கள் என்பதும் விளங்கவில்லையா?

மொழியாசிரியர்கள் முதலில் எழுத்துக்களை எப்படி எழுதியிருப்பினும், நாம் அவர்களைக் கண்டிக்கப் போவதில்லை. அவர்கள், உயிர்ப்புச்சுருக்குங் குற்றெழுத்துக்களையெல்லாம் முன்னர்க்கூறி, பின்னர் ஒரே அடியாக நெடுமூச் செழுத்துக்களை ஆக்கியுமிருக்கலாம் அன்றோ? அப்படிச் செய்வது சிரமமென எண்ணியே குறிலின்பின் நெடி லமைத்திருக்கின்றனர்.

அவர்கள் முன்னர் உயிரெழுத்திற் சிறிது சிறிது மூச்சை யிறுக்கிக் கஷ்டமுறாது பயின்ற பின்னரே மற்ற எழுத்துக்களை வித்தியார்த்திகள் கற்குமாறு வகுத்திருக்கின்றார்கள். இம்முறைவைப்பு ஏனைப் பாஷைகட்கு

இத்துணை நயம்தரும் விதத்தில் இல்லையென்றே சொல்லலாம். இன்னும் கவனியுங்கள்! வல்லெழுத்தும், மெல்லெழுத்தும் விரவிப்பயின்று இறுதியாக நாம் இடையெழுத்துக்களை மத்திய சிரம நிலையிற் பயிலவைத்திருக்கிறார்கள். இனி, இத்துணை அருஞ்சிறப்பின் எழுத்துக்களைத் தன்னகத்தே கொண்டுள்ள நமது பாஷையின் பெயரும் அதன் அமைப்பாதியவும் கவனித்தற் குரியவையன்றோ? நம் மொழியின் பெயரும் மேற்கூறியவாறே நயங்கொண்டு அப்பெயர் மாத்திரையானே தனக்குள்ள பல நலங்களையும் பொலிவினையும் அடக்கிக்கொண்டு, மிகச் செட்டாய் அதாவது ஒரு சிறு பதமாய் மூன்றே எழுத்துக்கொண்டாகியதாய், ஆன்ற பொருள்களைத் தருவதாய் 'தமிழ்' என விளங்குகின்றமை, நினைக்கும்போதே, சொல்லும்போதே, நமதுள்ளத்திற்கும் நாவுக்கும் கேட்போர் செவிக்கும் ஒருவகையான தெய்வமணம், தெய்வீக இன்பம் தரவில்லையா? இது குறித்தன்றோ பெரியாரொருவர்:

> " × × தமிழ், வரைந்த ஏட்டைத்
> தொட்டாலும் கைமணக்கும் சொன்னாலும் நாமணக்கும்
> துணிந்தவ் வேட்டை;
> நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே! × × "

என்கின்றார்.

" தமிழ் " என்பதன் முதலாமெழுத்து வல்லினத்தது. இரண்டாவது மெல்லினம் ஆறினுள் ஒன்றாயது. ஈற்றெழுத்தோ இடையெழுத்து. இது, முறையே: ௧+௧+௨ ஆக உ௨ மாத்திரை யளவுடைய பெயராய் விளங்குவது. இம்மட்டோ? இனிமை என்னும்பொருளைத் தனக்காகவே கொண்டுள்ளதுமாம். ஆகவே தமிழென்பது இனிமைமிக்க பாஷைக்காயிற்றென்பர் அறிஞர். தமிழ் என்பது பண்பாகு பெயர். அதாவது இனிமை வாய்ந்த குணத்தால் ஏற்பட்டது. சிந்தாமணியில் திருத்தக்கதேவர் ஓரிடத்தில் " தமிழ் தழீஇய சாயலவர்" என்று கூறிப்போந்தமைக்கு உரைவிரித்த நச்சினார்க்கினியர் " இனிமை தழுவிய சாயலுடைய பெண் மணிக " ளெனக் குறித்திருப்பது இதற்குத் தக்க ஆதாரமாகும். மேலும்,

இப்பதத்தினைச் சிதைவுபடுத்தி, 'தமி+ழ்' எனக்கொண்டு: தமி = தனக்கொப்புமை யிலாத (தனித்த), ழ்=(இப்பாஷைக்கே) சிறந்துள்ள,ழ்-என்னும் எழுத்தைக்கொண்டு விளங்குவது என்பதும் ஒருசாரார்கொள்கை. எனவே " தமிழ் " ஆனது தன்னகத்தே வல்லோசையும் மெல்லோசையும் இடைப்பட்ட ஓசையும் சிறந்திருத்தலின் அம் மூவோசையினினிமையால் தமிழெனப் பட்டதென்பதும்,சிறந்தத் தன்மைவாய்ந்ததாய் தனக்கு ஒப்பும் உயர்வுமின்றித் திகழ்வதென்பதும், மிக்கு இனிமையே தனதுருவமாக உடையதென்பதும் பெறப்பட்டது.

ஆதலின், இம்மொழி வடமொழியினைக் காட்டிலும் எழுத்தாக்கத்திலும் சொல்லமைப்பிலும் உயிர்ப்புச் செட்டிலும் மிகவும் மேம்பாடுடையது

என்பர் அறிஞர். ஒருசிறு குறிப்பை உணர்த்துவதற்கு வடமொழியில், உறுமலும், அதட்டலும், கர்ச்சனையும் ஆகிய இவற்றால் பிராணவாய்வு (உயிர்ப்புச்செட்டு) அதிகம் செலவாதலும் காண்கிறோம் வடமொழியில் ஒரு வாக்கியத்திற் களிக்கும் சக்தியானது தமிழ்மொழியிற் பலவாக்கியங்களைப் பேசுவதற்குக்கூட செலவாவதில்லை என்பதை, திருவாளர், பா. வே. மாணிக்க நாயக்கரவர்கள் சென்னையில் முன்னொருகாலை, தோற்கருவிகொண்டு நிரூபித்ததனால் அறியலாகும். ஆகவே தமிழ் வடமொழியினுஞ் சிறப்புடையதென்றல் மிகையாகாது. ஆன்ற அறிஞர் வடமொழிக்கு வெகுவாய் முற்பட்ட காலந்தொடங்கி இருப்பது தமிழ்மொழியே என்றும், வடமொழிக்குந் தாய்ப்பாஷையாய் விளங்கும் பெருமையுடையது அதுவே என்றும் கூறுவர். இதனைத் தமிழ்ப்பெருமை கூறவந்த, காலஞ்சென்ற திருவாளர்: மாகறல் - கார்த்திகேய முதலியாரவர்களின் குறிப்பைக் கொண்டு தெளிக. அது வருமாறு:—

"தமிழ, உலகத்து முதல்முதலுண்டாய இயற்கைமொழி; சிறுசிறு சொற்களையுடையது; நோய்கொண்டோர், சிறுவர் முதலோர்க்கும் உச்சரித்தற்கு எளிமையானது; கன்னடம் தெலுங்கு முதலிய பலபல பாஷைகளுக்கும் முதன் மொழியாகவுள்ளது; வேதங்களுக்கு நெடிதுகால முற்பட்டது; சிவன், திருமால் முதலோரும் பேசும்பெருமையுடையது; ஏகாட்சரமந்திர முதலியவற்றாற் சிறந்தது; தனக்கு மேலொரு பாஷையுமில்லாதது; ஆரியத்தோ டொருப்பட்டது; யோக மொழியாக வுள்ளது; காரணச் சொற்களையே தனக்கு உரிமையாகக் கொண்டுள்ளது; இமயகூட முதலிய சத்தகூடங்களிலும் வளர்சசி பெற்றுள்ளது; சுருங்கக்கூற லென்னும் அழகில் விரிந்த பொருட்பொதி வுள்ளது; மனதின தோற்றங்களை வெளியிடுவதற்கு நுணுக்கமாகவும் தத்துவ வகையாகவும் அமைந்த சொற்பொலிவுடையது; மனோபாவனைகேற்ற செம்பாகமும் தாக்கீக வழக்குமுடையது; இன்பந்தரும் வைதர்ப்ப நெறியாற் சிறநதது; மனத்தின் தோற்றத்தைத் தெளிவாகக் கூறுவதற்கு ஏற்றவலிமையும் தாற்பாலது; யாழுக்கமைந்த பண்ணின் அழகுடையது; ஆரியம், கிரீக்கு முதலியவற்றிலும் கலந்துள்ளது, ஆரியத்துககு நெடிதுகால முற்பட்டது; அதற்குத் தாய் மொழியுமாம்; மற்றும் இதன் பெருமைகள் அளவில்லன" [செந்தமிழ்ச் செல்வி-சிலம்பு: 2, பக்கம். 390]

இஃது ஆராய்ச்சிக்குரியது. இனி மேற் சில பொருள்களை ஆராய்வாம்.

சொல் நயம்.

முற்கூறிய உயிர்ப்புச செட்டுடன் சொற்செட்டும் உடையது நம்தமிழ் மொழி யென்பதை மறந்திருக்கமுடியாது. இது, சொல் செட்டாய்வழங்கும் நயம் மிக்குடையதாதலாற்றான் ஆசிரியர்கள் தமிழ்நூ லெழுதுந்தோறும் தங்களின பரந்த கருத்துக்களை யெல்லாம குறுகிய சொற்களிலேயே

அமைத்துப் போந்துள்ளார்கள். அவர்கள் அவ்வாறு இயைக்காமற் பிற மொழியாளர்களைப் போன்று வழவழப்பாக நீட்டிப்பயின்று போயிருப்பின் நமதறிவு வளர்சிக்கும், அது மிக வுண்டாக்கும் நந்தமிழ் மொழிச்சிறப்பிற்கும் ஏது குன்றிப் போயிருக்கும் நமதுமொழி, தெய்வத்தன்மை வாய்ந்ததாகலின் வரநேரும் இடையூறுகளுக் கிடங் கொடுக்காது மிளிர்வதாகின்றது. நிற்ப, சொற் செட்டுடைமையே பாஷைகளுக்கு அழகு தருவதாம். அதுவே பாஷைகளிற் பொகஷிஷத்தன்மை வாய்ந்திலகுவது. இது குறித்தே: "சோல்வளம், மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ், செல்வம்" என்பர் குமரகுருபர சுவாமிகள். ஆனதால் எமமொழி சொறசெட்டோடு பிறங்குகின்றதோ அம்மொழியே உலகிற் றலை சிறந்த மொழியாக மேம்பட்டு விளங்கும். இப்பெருமை நமது அருந்தமிழ் மொழிக்கு மிக்கு வாய்த்திருப்பதற்குச சில உதாரணம் தருகின்றோம்.

(தொடரும்) சுகவனம். சிவப்பிரகாசன்,
தமிழ்ப்பண்டிதர், காவேரிப்பட்டணம்.

---

## ஆத்திசூடி உதாரணக் கதைகள்.

(126-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ஞயம்பட வுரை.

"ஞயம்பட=(நீ பேசும் பேச்சில்) இனிமை உண்டாக, உரை=பேசு," என்பது இதன் பொருளாம்.

உலகத்தில் எவரும், எவரிடத்தும், எதைப்பற்றியும் பேசுங்காலத்தில் இனிமையாகப் பேசவேண்டும். இனிமையுறப் பேசுதலாவது, கேட்பவர்க்கு வெறுப்பாவது, அயர்ச்சியாவது, அருவருப்பாவது உண்டாகாமல் திருப்தியும், களிப்பும், ஆவலும் உண்டாகுமாறு சாந்தமாகவும், அழகாகவும் பேசுதலாம். இங்ஙனம் நயம் விளங்கப் பேசுவதால் எத்தகையருடைய சிநேகமுமுண்டாகும்; விரோதிகளுங்கூட அப்பேச்சைக் கேட்டுப் பகை நீங்கி நன்மைபுரிய ஆரம்பித்துவிடுவார்கள். முடிவாகக் கூறுமிடத்து இனிய வார்த்தைகளால் உலகமுழுவதுமே வசியமாகிவிடும். அதனால் இன்சொலலுடையானுக்கு எப்பொழுதும் ஆனந்தமான வாழ்க்கையே கடைபெறும். இது குறித்தே,

"சிறுமையுள் நீங்கிய இன்சொல் மறுமையும்
இம்மையு மின்பந் தரும்"

என்றார் திருவள்ளுவனாரும். இதையுணராத சிலர், எவவிடத்தும் பிறர் வெறுக்கும் வார்த்தைகளையே பேசித் துன்புறுவர். இங்ஙனம் வெறுக்கத்தக்க வார்த்தைகளைப் பேசுவோர்களிற் பலவகையாருண்டு: சிலர், யார் எதைசசொன்னாலும் மறுப்பு வார்த்தைகளையே பேசிக்கொண்டிருப்பர்; சிலர், தற்பெருமைகொண்டு நல்லோர் கெட்டோர் ஆகிய எல்லோரையுமே அவமதித்து நிந்தைமொழிகளைக் கூறிக்கொண்டேயிருப்பர்; சிலர் பொரு

மைப் பேச்சுக்களையே பேசுவர்; சிலர் மித்திரபேதமான வார்த்தைகளையே விளம்புவர்; சிலர் தம்மைத்தாமே புகழ்ந்து பேசிக்கொண்டிருப்பர்; சிலர் எப்பொழுதும் புளுகிக்கொண்டே யிருப்பார்கள்; சிலர் தாங்களே பேசுவதில் சாமர்த்தியவான்களென்று நினைத்துக்கொண்டு பிரசங்க மேடைகளில் ஏறிச் சிலரை இகழ்ந்தும், தங்களுக்கு வேண்டிய சிலரைப் புகழ்ந்தும் மிகப் படபடப்பாகவும், கைகளை ஓங்கி மேஜைமேல் அறைந்தும், கையோடு கை புடைத்தும், சிம்மம் கர்ச்சிப்பதுபோல் கர்ச்சித்தும், வாயைக் கோணவைத்தும், கழுத்தை ஒருபக்கமாகத் திருப்பியும் பொதுஜனங்களுக்கு மிக வெறுப்புண்டாகும்படி பேசுவார்கள். இத்தகையினர்களுக்குப் பலரும் விரோதமாவார்கள். இவர்களுடைய வாழ்க்கை இனிதாக நடைபெறாது. இதற்குதாரணமாக ஒரு சிறு கதை கூறுவாம்:

ஒரு நகரத்தில் குமாரசாமிக் கவிராயர், முத்துச்சாமிப் புலவர் என்ற இரண்டு வித்வசிரோமணிகளிருந்தார்கள். இவர்களுக்குத் தமிழ் விற்பத்தியே இல்லை. அப்படி யிருந்தும் இவர்கள் வாயாடித்தனமாகப் பேசுவதால் தங்களுக்குத்தாங்களே புலவர்ப்பட்டம் சூட்டிக்கொண்டார்கள். உண்மையான பாவலர்களுடைய பாடல்களை யெல்லாம் தங்களால் இயற்றப்பட்டவை யென்று சொல்லிப் பாமரரை ஏமாற்றிவந்தார்கள். கௌரவமான வித்வான்களை யெல்லாம் தாழ்த்திக் கூறிவந்தார்கள். எப்பொழுதும் பிறரை நிந்தித்துப் பேசுவதே இவர்களுடைய வழக்கம். யார்வந்து இவர்களிடம் பேசினாலும், உடனே இவர்கள், அவர்களுடைய மனம் புண்படப் பேசுவார்களேயன்றிக் களிப்படையுமாறு பேசவேமாட்டார்கள். அதனால், இவர்கள் இருந்த நகரத்திலும், பிழைப்புக்காகச் செல்லும் மற்ற ஊர்களிலும் உள்ள ஜனங்களெல்லோரும் இவர்களுடன் எப்பொழுதும் கொடிய பகையுடையவர்களாகவே யிருந்துவந்தார்கள். பலர் பகையால் இவர்களுக்கு ஜீவனம் நடப்பது கஷ்டமாயிருந்தது. அப்படி யிருந்தும் இவர்கள், மனிதர் மனம் வெதும்பப் பேசும் வழக்கத்தை நிறுத்தவில்லை. சில புத்திமான்கள் அதை விட்டுவிடும்படி சொல்லியும் விட்டபாடில்லை.

புலவர்கள் இந்த வழக்கத்தை மேற்கொண்டிருந்தபடியால் இவர்களுக்குப் பழக்கமான ஊர்களிலுள்ளவர்களெல்லோரும் ஒரு காசும் கொடுப்பதில்லை; வேறு எவ்வித உதவியும் செய்வதில்லை. பல்லோர் பகையால் இவர்கள் பல தினங்கள் பட்டினிகிடந்து வருந்தினார்கள். அவ்வருத்தஞ் சகிக்கமுடியாமையால் இவர்கள் ஒரு சமயம் தங்களுக்கு அறிமுகமில்லாத புதிய ஊர்களுக்குப் புறப்பட்டுப் போகத் தீர்மானித்து நெடுந்தூரம் சென்று குமாரசாமிக் கவிராயர் ஓர் ஊரையும், முத்துச்சாமிப் புலவர் ஒரு நகரத்தையும் அடைந்தார்கள். குமாரசாமிக் கவிராயர் சென்ற ஊரில் ஒரு செட்டியாரைக் கண்டு, தம் வாயில் வந்தபடி தப்பாக அவர்மீது ஒரு கவிபாடினார். அவர் அதற்காகச் சந்தோஷப்பட்டுப் புலவரைச் சாப்பாடு முதலியவற்றால் உபசரித்து அவனுக்குத் தகுதியான சன்மானஞ் செய்யக்

கருதியிருந்தார். அப்போது அப்புலவரை அவருடைய தூர்க்குணம் அமைதியாயிருக்கவிடவில்லை. செட்டியார் வீட்டு வண்டிக்காரனிடம் போய் அவரின் குடும்ப சங்கதிகளை விசாரிக்கத்தொடங்கினர். அவன், 'செட்டியார் தவிட்டுக்காரி மகன்' என்று ஒரு கட்டுக்கதை கட்டிவிட்டான். பின்னர், புலவர் செட்டியாரிடம் போய், "ஐயா! நான் ஊருக்குப் போகவேண்டும்" என்றார். செட்டியார், "நாளைக்குப் போகலாம்" என்றார். குமாரசாமிக் கவிராயர், "நீர் தவிட்டுக்காரி மகனுதலின் உமக்குப் புலவர் ஜோக்கம்போல் நடக்கத் தெரியவில்லை" என்று வாய்த்துடுக்காகப் பேசினர். வந்தது மோசம். செட்டியாருக்குத் தாங்கமுடியாத கோபம் வந்துவிட்டது. அவர் பல்லைக் கடித்துக்கொண்டு எடுத்தார் விறகுக்கட்டையொன்றை; போட்டார் புலவருடைய முதுகில்; எடுத்தார் புலவர் ஓட்டம்; செட்டியாரும் அவருடைய வேலைக்காரரும் 'பிடி பிடி' யென்று புலவரைத் துரத்திக்கொண்டோடினர்கள். புலவர் வாயுவேகம் மனோவேகங்கொண்டோடினர்.

இவர் கதி இப்படி யிருக்க மற்றொரு கிராமத்திற்குச் சென்ற முத்துச்சாமிப் புலவர், அவ்வூரிலுள்ள பெரிய குடித்தனக்காரர் ஒருவரைக்கண்டு அவர்மீது சீரும், தளையும், மோனையும், எதுகையுமில்லாத ஒரு கவியை மிகச் சிறப்பாகப்பாடினர். அவர் சந்தோஷித்து இரண்டு மரக்கால் கேழ்வரகை அளந்து புலவருககுக் கொடுத்தார். புலவர், 'நமக்குச் சாப்பாட்டுக்குத் தட்டான இக்காலத்தில் இந்தத் தானியம்கிடைத்ததே நல்லகாலம்' என்று திருப்தியோடு அதை ஏற்றுக்கொள்ளாமல் அந்தக் குடித்தனக்காரரை நோக்கி, "நீ நாட்டுப்புறத்தானுகையால் புத்தியில்லாத மூடனு யிருக்கின்றாய்; என்னைப்போன்ற பெரும் புலவனுக்கு இந்த அற்பமான கேழ்வரகைக் கொடுக்கலாமா!" என்று படபடப்பாகப் பேசினர். குடித்தனக்காரருக்கு வந்துவிட்டது கோபம்; அவர், "அடா! போக்கிடமில்லாத புல்லனே! புண்ணியத்திற்கு நான் தானியங்கொடுத்தால் நீ என்னை மூடனென்று கேட்கிறாய்!" என்று கையில் வைத்திருந்த மரக்காலால் ஓங்கிப் புலவர் தலையில் மோதினர். புலவர், "அப்பா! செத்தேன்" என்று விரைந்தோடினர். அந்தக் குடித்தனக்காரரும் அவருடைய பண்ணைக்காரரும் புலவரைத் துரத்திக்கொண்டோடினர்கள். இவர்கள் இவ்வாறு ஓடும்போது குமாரசாமிக் கவிராயரும், அவரைத் துரத்திவந்தவர்களும் நடுவழியில் இவர்களைச் சந்தித்துக்கொண்டார்கள். குடித்தனக்காரரும் அவர் ஆட்களும் எதிரில் ஓடிவந்த குமாரசாமிக் கவிராயரைப் பிடித்துக்கொண்டார்கள். செட்டியாரும் அவரைச் சார்ந்தவர்களும் தங்களுக்கெதிரில் ஓடிவந்த முத்துச்சாமிப் புலவரைப் பிடித்துக்கொண்டார்கள். பின்னர் இரண்டு பக்கத்தாரும் புலவர்களுடைய வாய்த்துடுக்கை விசாரித்துணர்ந்து எல்லோரும் ஒன்றுசேர்ந்து இரண்டு புலவர்களையும் நையப் புடைத்து கொறுக்கித் தள்ளிவிட்டுப் போய்விட்டார்கள். புலவர்கள் பொருள் தேடப் போனவிடத்தில் அடியும் உதையும் பட்டதால் விம்மலும் பொருமலுமாய்த்

தங்கள் இருப்பிடங்கட்குத் திரும்பிவந்து தங்களுக்கு வாய்த்துமக்கிஞலேயே கெடுதி சம்பவிக்கின்றதென்பதை யுணர்ந்து அதன்மேல் எவரிடத்திலும் நயம்படப் பேசிச் சுகம்பெற்ருர்கள். (தொடரும்.)

செம்பூர்-வீ..ஆறுமுகஞ்சேர்வை.

---

## மாதர் நீதி மஞ்சரி.

(68-ம் பக்கத் தொடர்ச்சி.)

நாளாயணி:—இவரது இயற்பெயர் இந்திரசேனை என்பது. அழகிலும் நற்குண நற்செய்கைகளிலும் ஒப்புயர்வற்று விளங்கிய உத்தமி. தன்னடக்கம், இடம்பமின்மை, பெரியார்ப்பேணல் முதலிய அருங்குணங்கள் யாவும் இக்கற்பரசியிடத்தில் இவரது இளம்பருவத்திலேயே குடிகொண்டிருந்தன.

இவர் மவுத்கல்லிய ரென்னும் மாதவரொருவரை மணக்க நேர்ந்தது அவர் மிக்க வயோதிகராய்க் காணப்பட்டார். விவாகம் முடிந்ததும் அவர் மனைவியைப் பார்த்து "பெண்ணே! நீ இதுவரை பெற்றோரால் வெகு சிறப்பாக வளர்க்கப்பட்டு வந்தாய். சுகமான போஜனம், சொகுசான படுக்கை, சுந்தரமான வீடு, கண்ணைக் கவரும் உடைகள், கண்டோர் வியக்கும் அணிகள், பணிவிடை புரியும் பாங்கியர் யாவும் சிறக்க வமைந்திருந்தன வுனக்கு. என்னிடம் அத்தகைய சுகங்களிற் சிறிதளவையேனும் நீ யெதிர்பார்க்க முடியாது. நானோ வனவாசி. உட்கார்ந்த வண்ணம் உள்ளே புகக் கூடிய இலைகளாலாகிய சிறு குடிசையே எனது வாசஸ்தானம். காய் கிழங்குகளே எனக்குரிய உணவாக அமைந்திருப்பன. காட்டு மிருகங்களே எனது சுற்றம். அவற்றின் பேரிரைச்சலே நான் கேட்கும் சாமகானம். மரவுரியே நானணியும் உயர்வாகிய உடை. பசும் புற்றரையே என் படுக்கை. தவிர அநேக நாட்கள்வரையில் நான் ஊண் உறக்கமில்லாமலும் தனிமையாகவும் இருக்கநேரிடும். எனக்குரிய பணிவிடைகளையெல்லாம் நீ பத்தியுடன் பாங்குபெறப் புரியவேண்டியதாயிருக்கும். இத்துணைத் துன்பங்களை யின்பமாக ஏற்றுக்கொண்டிருக்க உன்னால் இயலுமானல் நீ என்னுடன் வரலாம்; இயலாதாயின் இங்கேதானே இருக்கலாம். உன் விருப்பம் யாது?" என்றனர்.

இவ்வார்த்தைகளைச் செவியுற்ற மங்கையர் சிகாமணி 'பெண்களுக்குத் தாயும் தந்தையும் தமரும் ஆசாரியனும் தெய்வமும் மற்றும் முற்றும் கணவரே' யென்னு முண்மையையுணர்ந்த உத்தமியாகலின், அவற்றிற்குச் சிறிதும் பயப்படாமல் அம்முனிவருடன் ஆரணியஞ் சென்ருர். அங்குத் தம் கணவருக்குரிய கடமைகளை அவ்வம்மையார் மனவாட்டமின்றி அவருக்குத் திருப்தியுண்டாகும்படி செய்துவந்தனர். மவுத்கல்லிய முனிவர், தம் மனைவியின் கற்புநிலையைக் கண்டு களிபேருவகை கொண்டனரேனும், மேலும் அவரைப் பரிசோதிக்கக் கருதி, தமது சரீரத்தில், 'அங்க

மெலாம் குறைந்தழுகும் தொழுநோ'யாகிய பெருவியாதியை வருவித்துக் கொண்டனர். உடல் முழுதும் புண்கள் தோன்றி வெடித்து, சீழும் இரத் தமும் பெருகின. அவற்றினின்று சில சமயங்களில் நுண்ணிய புழுக்கள் நிறைந்து நெளிந்து பலபலவென்று உதிரும். துர்நாற்றம் காததூரம் வீசும். இவ்வாறிருந்தும் அப்பெண்கள்நாயகம் அவர்மீது சிறிதும் அரு வருப்புக்கொள்ளாமல் அவருடைய புண்களையெல்லாம் சுத்தமாய்த் தன் கையால் தேய்த்துக் கழுவி முன்றானையால் துடைத்து மேலும் செய்ய வேண்டிய உபசாரங்களை யெல்லாம் குறைவறச் செய்துவந்தாள்.

இங்ஙனமாக, ஒருநாள் அம்முனிவர் அம்மையாரை நோக்கி "பெண் ணே! நோய் என்பதை நொய்யளவும் அறியாதிருந்த எனக்கு, உன்னை மணஞ்செய்த பின்பு இத்தகைய கொடுநோய் நேரிட்டது. நீ எனக்கு மனை வியாக வாய்த்திராவிட்டால் இந்நோயும் வாய்த்திராது. நீ கொடிய பாவி போலும். இந்நிலைமையில் 'முடவன் கொம்புத்தேனுக் காசைப்படுவது போல,' தீர்த்த யாத்திரையில் எனக்கு விருப்பம் உண்டாயிருக்கின்றது. இதற்கு என்ன செய்வேன்!" என்று துக்கித்தார்.

நாளாயணி அதைக்கண்டு 'என்னுருயிர்த் தலைவரே! அடியாள் கொடிய பாவியென்பதிற் சிறிதும் ஐயமில்லை. இந்நோயினின்றும் விடுவிக்கும் மார்க்கம் சிறிதும் அறியேனாயினும், தங்கள் விருப்பத்தை நிறைவேற்ற அடியாளிருக்கின்றேன். எனதுயிரும் உடலும் தம்முடையனவே யன்றோ?' வென்று தேறுதல் கூறி, அவரை ஓர் கூடையில் பக்குவமாகவைத்துத் தலைமீது சுமந்துகொண்டு தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டு, பற்பல பிர பலமான புண்ணிய தீர்த்தங்கள்தோறும் சென்று நீராடுவித்து வந்தாள்.

இவ்வாறு செல்லுகையில், வழக்கம்போல் வழியிலெதிர்ப்பட்ட ஓர் ஊரில் ஓரிரவு தங்கினர். அப்பொழுது அம்முனிவர் அம்மையாரை நோக் கித் தாம் அவ்வூரிலிருக்கும் விலைமாதொருத்தியைக் கண்டு காதல்கொண் டிருப்பதாகவும், அவளை அடையாவிடின் தன் ஆவி நீங்குமென்றும் கூறி னர்.கூறவே பாவையர் திலகமாகிய நாளாயணி அத்தாசியினிருப்பிடத்தை யறிந்துகொண்டு ஒருவரு மறியாதபடி விடியற்காலையிற் சென்று அவள் வீட்டுவாயிலைச் சுத்தமாக மெழுகிப் பெருக்கிக் கோலமிட்டு வந்தார்.

அந்த வேசி நாளாயணியம்மை அவ்வாறு செய்துவருவதை ஒருநாள் கண்டுபிடித்து அதன் காரணத்தை யறிந்து, அவர் வேண்டுகோளுக்கிணங் கினள். முனிவரின் எண்ணம் கைகூடியது. நாளாயணி மீளவும் அவ் வேசி யின் வீட்டினின்றும் தம் கணவரைக் கூடையில் இருத்தித் தூக்கிவரும் வழியில் அக்கூடையானது கழுவிலேற்றப்பட்டுத் துன்பப்பட்டுக்கொண் டிருந்த மாண்டவியரென்னும் முனிவர் காலில் மோதிற்று. அதனால் அம் முனிவர் மிக்க நோயடைந்தவராய் 'எனக்கு நோயையுண்டாக்கின மாது சூரியோதயமானதும் தனது மாங்கலிய மிழக்கக்கடவள்' எனச் சபித்த னர். அச்சாபமொழியைச் செவியுற்ற நாளாயணி 'இருளின் மிகுதியால்

தான் அம்முனிவர்க்குத் துன்பந்தர நேர்ந்ததற்காக வருந்திச் சூரியோதய மாகாதிருக்கவேண்டுமென்று கடவுளை வேண்டினுள். பதிவிரதையின் வாக்குப் பொய்க்குமோ?

காற்றும் வெய்ய கனைகதி ருங்கடல்
தோற்று தண்ணில வுச்சுடர்த் திங்களும்
போற்று கற்பிற் புரிகுழற் பூங்கொடி
மேற்ெறு டும்பொழு துள்ளம் வெருவுமால். (காசிகாண்டம்)

என்றபடி, எட்டுநாளளவும் சூரியோதயமாகாமல் உலகெங்கும் காரிருள் கவிந்துகொண்டது.

இவ்விபரீதத்தைக் கண்டு தேவர்கள் பயந்து மாண்டவிய மகரிஷியின் சாபத்தை நிவிர்த்திசெய்விக்க, அவ்வம்மணியும் 'சூரியோதயமாகுக' எனக் கூறித் தன் சாபத்தையும் நீக்கினுர். சூரியனுதயமாகவே இருள்நீங்கி உலகம் களித்தது.

தம் மனைவியின் கலங்காத கற்பு நிலையைக் கண்டு களிகூர்ந்த மவுத்கல்லியர் தாம் மேற்கொண்டிருந்த விருத்தாப்பியத்தையும் வியாதியையும் நீக்கி மன்மதாகாரராய் விளங்கினுர். அதுமுதல் அவ்விருவரும் அளவிலா ஆனந்தத்தோடு பல போகங்களைத் துய்த்து அன்புற்று அளவளாவி வாழ்ந்துவந்தனர்.

(அவ்வம்மைதான் திரௌபதியாகப் பிறந்தார். திரௌபதாதேவியின் சரிதையைப் பலரு மறிவாராகலின் இங்கு எழுதாமல் விட நேர்ந்தது)

திருவெண்காட்டுநங்கை:-இவர் பெரிய புராணத்திற் கூறப்பட்டுள்ள அறுபான்மும்மை நாயன்மார்களி லொருவராய சிறுத்தொண்ட நாயனுரின் மனைவியார். கணவன் கருத்திற்கிணங்க நடந்து அவர் சொல்லைத் தெய்வ வாக்காகக் கொண்டொழுகியவர்.

கொழுநன் சொற்கட வாதுறை கொள்கையே
வழுவி னல்லறம் வான்றவ மாற்றுதல்
தொழுது தெய்வம் பராய்மலர் தூவுதல்
பழுதில் கற்புடைப் பத்தினிக் கென்பவே. (காசிகாண்டம்.)

என்றபடி, கணவர் கருத்திற்கிணங்கி அவர் சொல்லை மீறுமல் ஒழுகுபவர். இதுதானே கற்பு. 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' யன்றே? இவர் தம் கணவர் மேற்கொண்டிருந்த அடியார்க்கு அன்னமளிக்கும் திருத்தொண்டில் அவருக்கு வேண்டிய உதவிகளைப் புரிந்துவந்தார். இவ்வாறு கணவனும் மனைவியுமாகிய இருவரும் மனமொத்துச் செய்தாலன்றே எல்லாத் தருமகாரியங்களும் செவ்வையாக நடைபெறும். ஏறுமாருக இருந்து செய்தால் எந்தக் காரியமும் ஈடேருது.

காதல் மனையாளும் காதலனும் மாறின்றித்
தீதி லொருகருமம் செய்யவே.

என்பது ஆன்ரேர் விதியன்ரே?

ஒருநாள் சிவபெருமான் ஓர் அடியாராகத் தோன்றிச் சிறுத்தொண்டரை நோக்கி 'எனக்கு நீ அன்னமளித்தல் வேண்டும். யானுண்பது நரமாமிசம். அதுவும் ஆறுவயதுள்ள சிறுவனுடைய கறியாயிருத்தல்வேண்டும். மேலும் அச்சிறுவன் நகைத்துக்கொண்டிருக்கத் தாய்பிடிக்கத் தந்தையறுக்கவேண்டும். இவ்வாறு படைக்க உன்னுலியலுமோ' வென, சிறுத்தொண்டர் அதற்குச் சம்மதித்து மனைவியிடம் வந்து 'இவ்வாறு தம் பிள்ளையை யறுக்கப் பெற்றோரெவரும் சம்மதியாராகலின், நாம் நம் பிள்ளையை யறுத்துச் சமைக்கவேண்டு' மென்னலும் அம்மையாரும் அதற்கு உடன்பட்டனர்.

அதன்படி தன் ஏகபுத்திரனுன சீராளனைத் தன் மடியிலிருத்திக் கொண்டு அறுக்கச்செய்து பலவித கறிகளாகச் சமைத்து அடியார்க்கு அன்னமிட்டனர். முடிவில் கடவுளருளால் புத்திரனையடைந்து சுகமாக வாழ்ந்திருந்து சிவபதமடைந்தனர்.

**வல்லாளன் மனைவி** :—வல்லாளனென்னும் மன்னவனொருவனிருந்தான். அவனுக்கு இரண்டு மனைவியரிருந்தனர். அவ்வரசன் அன்னசத்திரம் முதலிய பல தருமங்களைச் செய்துவந்தான். இங்ஙனமாக ஒருநாள் சிவபெருமான் விட சன்யாசியாகி அவனிடம் சென்று தான் ஒரு ஸ்திரீயை விரும்பி வந்ததாகக் கூற, அவரது விருப்பத்தை நிறைவேற்றக் கருதிய வல்லாளன் எங்கும் விலைமாதர்கள் கிடையாமையால் வருந்தி 'நம்மிடம் இரண்டு மாதர்களிருக்க, 'வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலைவார்' போல, நாம் ஏன் மாதர்களுக்காகக் கவலைகொள்ள வேண்டு மெனத் தேறி, இளைய மனைவியிடம் சென்று சந்நியாசியின் விருப்பத்தைத் தீர்க்கவேண்டுமெனக் கூறினுன். அப்பொழுது அம்மங்கையார் சற்று ஆலோசனையி லாழ்ந்தார். அதையறிந்த வல்லாளன், 'நீ என்னிடம் மாருத அன்புடையவளா யிருப்பது உண்மையாஞல் நான் சொன்னபடி செய்ய வேண்டும். என் கட்டளையே உனக்கு விரதம். என் வார்த்தையை மீருதிருத்தலே கற்பாம். இதையன்றிக் கற்பென்பது வேறொன்றில்லை' யெனலும், உடனே அவ்வுத்தமி தன் குற்றத்தை யுணர்ந்து, கணவன் வார்த்தைக் கிணங்கி நடத்தலே தனது கடமையென்றறிந்து, அதற்குச் சம்மதித்து ஆடையணிகளால் தன்னை யலங்கரித்துக்கொண்டு, சயனக்கிருகத்தை யடைந்து சந்நியாசியை யணையவணுக, அவர் தமது விடரூபம் நீங்கி, குழந்தையாகி அழத்தொடங்கினுர். அரசன் முதலாயினுரறிந்து ஆனந்தவாரியில் ஆழ்ந்தனர். வல்லாளனும் அவனது மனைவியரும் தமக்குப் புத்திரப் பேறில்லாமலிருந்த குறை நீங்கப்பெற்று இன்பமாக வாழ்ந்திருந்து முடிவில் முத்தியெய்தினர். (தொடரும்.)

பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப்பண்டிதர், சித்தூர்.

---

**சந்தாதாரர்களுக்கு**.—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

## ஆரிய சித்தாந்தம்.

(130-ம் பக்கத் தொடர்ச்சி.)

### சிஷ்டாசாரம்.

சுற்றந்தழால் ஒப்புரவொழுகுதலாதியால் தர்ம பலனை யடைவது சித்தமாயின், அரியகன்மங்களைக் கஷ்டப்பட்டுச் செய்து வருந்துவதினும் இத்தகைய கன்மங்களே சாலும். அவை யெற்றுக்கெனின், சுற்றந்தழால் ஒப்புரவொழுகலாதி கன்மங்கள் உலகநடை சீர்பெற்று நடைபெறுமாறு கல்விகேள்விகளாற் சிறந்தோரான் ஏற்படுத்திய நியமங்களாம். இந்நியமங்களில்லாவிடின் உலகாசாரம் சீர்பெறாது. உலகாசாரம் சிறப்புற நடவாதாயின் கடவுளால் நியமிக்கப்பட்ட வைதிக கன்மங்கள் நிலைகெடும். ஜனங்கள் ஊரைவிட்டு அந்நிய தேசங்களுக்கும் பிற ஊர்களுக்கும் செல்லும்படியான பல சந்தர்ப்பங்கள் நேரிடும். அப்போது ஒருவருக்கொருவ ருபகாரம் செய்யாமலிருந்தால் கஷ்டம் நேரிடும். வைதிக கன்மங்களும் தடைபடும். அவ்விதக் கஷ்டங்களை நீக்கிக்கொள்வதற்கே இவை நியமிக்கப்பட்டன. இவை சிஷ்டாசாரம் என்று கூறப்படும்.

சிஷ்டாசாரமாவது, அவ்வத்தேசத்திலுள்ள கல்வி கேள்விகளிற் சிறந்த சான்றோர், தேசகால வியல்புகளையும் அங்குள்ள பிரஜைகளின் குணகுணங்களையும் ஆராய்ந்தறிந்து வைதிக நெறியோடு முரண்படாதவாறு நியமிக்கப்படும் கன்மநெறியாம். இந்நெறிகளும் நன்மைதருவனவாம். ஏனெனில் வேதவிதிக்கு மாறுபடாமல் நியமிக்கப்பட்டிருத்தலால் இதுவும் வைதிகநெறியேயாம். ஒப்புரவொழுகலாதிகள் உலகிற்கு உபகாரார்த்தமாகவே நியமிக்கப்பட்டபடியால் வைதிகநெறிக்கு ஒப்பாகா. உபகாரத்தினால் வரும் பயனே ஒழிய மற்றைய கன்மங்களைப்போலப் பாவநிவாரணம், சித்தசுத்தி, ஞானம் முதலியவற்றைக் கொடுப்பதில்லை. ஆதலால் வைதிக கன்மங்களை அவசியம் செய்தலே வேண்டும். வறிஞர் முதலியோர் ஒப்புரவொழுகலாதி கன்மங்களை விட்டுவிடலாம். வைதிககன்மங்களை ஒருபோதும் விடக்கூடாது.

வடதேசங்களில் அத்தை, மாமன் மக்களாகிய ஆண் பெண்களுக்கு விவாகம் செய்வதில்லை. அது இத் தென்தேசத்தில் குற்றமில்லையென்று இவ்விடத்திய சான்றோரால் நியமிக்கப்பட்டது. பூர்வகாலத்திலிருந்த அரசர்கள் உத்தரதேசத்திலிருந்து பிராமணர்களை அழைத்துவந்து குடியேற்றினார்கள். அப்போது விவாகம் செய்வதில் சிறிது இடையூறு நேர்ந்தமையால் அத்தை மகளையும் மாமன் மகளையும் விவாகம் செய்துகொள்ளலாமென்று சிஷ்டர்களால் விதிக்கப்பட்டபடியால், அந்தச் சிஷ்டாசாரம் இங்கே நிலைபெற்றுவிட்டது. நேற்றையதினம் சமையல்செய்த அன்னம் முதலியவற்றை மறுநாள் புசிக்கக்கூடாதென்பது ஸ்மிருதி விதித்த விதியாம். இங்குள்ள சீதோஷ்ணத்தை யுத்தேசித்து இவ்விடத்திய சிஷ்டர்கள் அவற்றைப் புசிக்கலாமென்று விதித்தார்கள். அதுவும் நடைபெற்று வரு

வதும் பிரத்தியட்சம் வடதேசங்களில் பூணூல் போடப்படாத பிராம ணப் பிள்ளைகள் பந்திபோஜனத்துக்கு அனருகர் என்று விதிக்கப்பட்டது. இதுவும் ஸ்மிருதி விதியாம். ஆயினும் அது குற்றமில்லையென்று இத் தேசத்துப் பிராமண சிரேஷ்டர்கள் கூறினார்கள். ஆதிகாலத்தில் பிராம ணர்கள் அகப்படுவது இவ்விடத்தில் துர்லபமானதுபற்றி இவ்விதி ஏற்பட் டதுபோலும். இவைகளெல்லாம் கல்விமான்களாகிய சிஷ்டர்கள் ஸ்மிருதி யாதி சாஸ்திரங்களை யாராய்ந்து தமது பேரறிவினால் காலதேச பிரஜைக ளின் இயல்புகளை நோக்கி வேதவிதியோடு முரணாதவாறு இயற்றப்பட்ட படியால் இவைகள் சிஷ்டாசாரம் என்று புகழப்படுகின்றது. ஒப்புரவாதி களும் உலகநெறி பிறழாதவாறு சிஷ்டர்களால் நியமிக்கப்பட்டபடியால் இதுவும் சிஷ்டாசாரமேயாம்.

இனி தேசங்கடோறும் ஆசாரம் மாறுபடும். அது சாகாபேதங்களா லும் தேச அனுஷ்டான முறைமையாலும் மாறுபட்டதாதலால் குற்றமாவ தில்லை. ஆயினும் பிரதேசத்தார் அதை அனுஷ்டிக்கக்கூடாது. அத்தேசத் தாரே அனுஷ்டிக்கலாம். சில அசந்தர்ப்பங்களினால் நாம் அத்தேசங்களில் வைதிக கன்மங்களை அனுஷ்டிக்கநேரிடும். அப்போது உபாத்தியாயர் கிடைப்பதரிதாதலால் அத்தேச வழக்கம்போல அனுஷ்டிக்கவேண்டுமே தவிர நித்திய கன்மங்களை விட்டுவிடக்கூடாது. நமது தேசம் வந்தபின் அதை அனுஷ்டிக்கக்கூடாது. நமது முறையைப்பற்றியே அனுஷ்டிக்க வேண்டும். இவ்விதிகள் ஸ்மிருதிகளோடு மாறுபடுமாயின் மனுஸ்மிருதியி னால் திருத்திக்கொண்டு நடத்தவேண்டும். மனு ஸ்மிருதியோடு மாறுபடு மாயின் அது தவறேயாம். வேதவிதி வாக்கியங்களாலேயும் அறிஞர் சீர் திருத்திக்கொளவர். ஆதலால் சிஷ்டாசாரங்கள் மனுஸ்மிருதியோடும் வேதவிதியோடும் மாறுகொள்ளாமல் இருக்கவேண்டும்.

இதுபற்றியே ஸ்மிருதிகள் ஒன்றுடனொன்று மாறுபட்டபோது வேத விதியால் சந்தேக நிவிர்த்தி செய்துகொள்ள வேண்டும் என்று மீமாம்ஸா சாஸ்திரம் வரையறுத்தது. ஸ்மிருதிகள் சாகாபேதம்பற்றிக் கூறியிருத்த லால் அது வேதவிதிக்கு மாறுபட்டதாகாது. நமது சாகைக்குப் பிரமா ணங்கொள்ளக்கூடாதானாலும் இதர சாகைக்குப் பிரமாணமாதலால் அது தவறு என்பது இல்லை. இவ்விடங்களில் நமது சிஷ்டாசாரத்தையே தழு விக்கொள்ளவேண்டும். அவர்கள் சாகைக்கு ஒத்தபடி வைதிக விதிக்கு மாறுபடாமற் செய்திருப்பார்களாதலால் அதுவே பிரமாணமாம்.

இனி கிருஹ்ய சூத்திரங்கள் என்று ஒரு சாஸ்திரம் உண்டு. இது கற்பசூத்திரமென்றும் பேர் பெறும். இக்கற்பசூத்திரங்கள் பதினெட்டு. ஸ்மிருதிகளில் மனு ஸ்மிருதி தலைமைபெற்றதுபோலக் கற்பசூத்திரங்க ளில் போதாயனம் தலைமையானது. ஏனைய சூத்திரக்காரர்கள் இதைக் கொண்டே தங்கள் சாகைக்கு ஒத்தவாறு சுருக்கியும் விரித்தும் செய்து கொண்டார்கள். கற்பசூத்திரமென்பது வைதிக கன்மங்களைச் செய்யும்

முறை கூறுவது. இது அடிப்பட்ட சான்றோரால் செய்யப்பட்டதாதலால் தங்கள் தங்களுடைய கற்பசூத்திரத்தைக்கொண்டே வைதிகக்கன்மங்களைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் வைதிகக் கன்மங்களில் யாதொரு தவறும் நேரிடாது.

கற்பசூத்திரங்கள் தர்மசாஸ்திரங்களை விடச் சிறந்தன. ஸ்மிருதிகளாகிய தர்மசாஸ்திரங்களில் தர்ம சொரூபமும், இந்தக் கர்மத்துக்கு இது பயன் என்றும் கூறும். அதைப் பிரயோகிக்கும் முறையும் மந்திர தந்திரங்களும் அவற்றுள் கூறப்படவில்லை. அந்த முறை கற்பசூத்திரங்களிலேயே யுள்ளன. வைதிக கர்மங்களுக்கு விதியும் மந்திரப் பிரயோகங்களும் வேதாந்தங்கள் ஆறனுள் ஒன்றாய்க் கணக்கிடப்பட்டன. இது சர்வபிரசித்தம். வேதங்களில் பல சாகைகள் (பிரிவுகள்) உள. அவ்வச்சாகைக்குரிய மந்திரங்களைக்கொண்டே அவ்வச்சாகைக்காரர்கள் தங்கள் வைதிககர்மங்களைச் செய்யவேண்டியது அவசியமாதலால் கற்பசூத்திரங்கள் பதினெட்டாயின. அவை பூர்வ சூத்திரங்கள், அபர சூத்திரங்கள் என இருவகைப்படும். போதாயனம், ஆபஸ்தம்பம், ஸத்தியாஷாடம், திராஹ்யாயனம், ஆகஸ்தியம், சாகல்யம், ஆசுவலாயனம், சாம்பவீயம், காத்தியாயனம் இந்த ஒன்பதும் பூர்வசூத்திரங்களாம். வைகானஸம், சௌனகீயம், பாரத்வாஜம், ஆக்னிவேசியம், ஜைமினீயம், மாதுன்யம், மாத்தியந்தினம், கௌண்டின்யம், கௌஹீதகம், இந்த ஒன்பதும் அபரசூத்திரங்களாம்.

வடநாட்டில் பதினெட்டுச் சூத்திரங்களும் அனுஷ்டானத்தில் இருக்கின்றன. நமது தேசமாகிய இத்தென்னாட்டில் போதாயனம், ஆபஸ்தம்பம், ஸத்தியாஷாடம், திராஹ்யாயனம் இச்சூத்திரக்காரர்கள் பெரும்பான்மையோர். ஆசுவலாயனிகள், காத்யாயினிகள் சிறுபான்மையர். இவற்றுடன் வைகானஸம், பாரத்வாஜம், அக்கினிவேசியம், ஜைமினீயம், மாத்தியந்தினம் சேர்ந்து பதினொரு சூத்திரங்கள் வழங்குகின்றன. கன்னட தேசத்திலும் தெலுங்கு தேசத்திலும் சாம்பவீயம், கௌஹீதகம் என்னும் இரண்டு சூத்திரங்கள் அதிகமாய் வழங்குகின்றன. ஆகத் தென்னாட்டில் பதின்மூன்று சூத்திரங்களை அனுஷ்டிப்பவர்கள் இருக்கிறார்கள். இந்தக் கற்பசூத்திரங்களின் விசேஷங்களைச் "சரணவியூகம்" என்ற நூலில் விரிவாய்க் காணலாம். இவற்றால் வைதிகக் கன்மஙகளுக்கு வேதவிதி முறையுண்டென்பது பிரசித்தம். ஏனைய ஒப்புரவாதிகள் ஜனங்கள் தத்தம் விருப்பம்போல நடத்தப்படுவன. ஆதலால் அது செய்ததனால் மாத்திரம் சித்தசுத்தியையும் ஞானத்தையும் அடையமுடியாது. வைதிகக்கன்மங்களை முறைப்படி யனுஷ்டிப்போர்க்கு இக்கன்மங்களும் பயன்தரும் என்பதேயாம். இவ்வைதிகக் கன்மமுறைகளை உபாத்தியாயர்கள் அறிந்தே கர்மம் செய்விக்கின்றார்கள். ஆதலால் நமக்குக் கன்மலோபம் நேரிடுவதில்லை.

சிஷ்டாசாரம் முற்றிற்று.

சிவானந்தசாகரயோகீஸ்வரர்.

---

# பகற்கொள்ளையும் படுமோசமும்.

இவ்விஷயத்தை அலக்ஷியம் செய்துவிடாது ஏமாற்றமடைந்தோர் இனி ஏமாறவிருப்போரனைவரும் அறியும்படிச் செய்வது ஆனந்தபோதினியின் கடன் ஆகையால் கூடியவரை அதனைச் சுருக்கமாகவே வரைகின்றேன்.

சுமார் மூன்று மாதங்களுக்குமுன் வெளிவந்த நம் ஆனந்தபோதினியில் "நாட்டின் வறுமை நீங்கிவிட்டது; ஏன் கவலைப்படுகிறீர்கள்? நமது அனுபவமான கைத்தொழில் முறைகளையும் புதிய யோசனைகளையும் தேச முன்னேற்றத்தைக் கருதி உங்களுக்கு இனாமாய் அனுப்பிவருகிறோம். உடனே! அணா முத்திரையுடன் உங்கள் முழு விலாசத்தையும் அனுப்பி வையுங்கள்" என்ற ஓர் விளம்பரம் வெளியிடப்பட்டிருந்ததை அபிமானிகள் பார்வையிட்டிருப்பார்களென நம்புகிறேன். அவ்விளம்பரத்தைக் கண்டு மருண்ட ஓர் அன்புள்ள நண்பரின் வேண்டுகோளுக்கிணங்கி, குறித்த கைத்தொழில் முறைகளின் விபரத்தைத் தெரிவிக்குமாறு விளம்பர தாரருக்கு ஓர் கடிதம் எழுதினேன். இரண்டு மூன்று தினத்தில் பதிற்கடிதம் வந்து கிடைத்தது. அதனுள் இருந்த கடிதத்தின் சாரமாவது:—

"அன்புள்ள நண்பரே! தாங்கள் .. ...தேதியில் எழுதிய கடிதம் வந்து கிடைக்கப்பெற்றோம்; மெத்த சந்தோஷம். தவிர, நாம் ஐரோப்பா, அமெரிக்கா, சீனா, ஜப்பான் ஆப்பிரிக்கா முதலிய அந்நியதேசங்களிற் சஞ்சாரஞ் செய்து அனேக கைத்தொழிற்கல்வி நிபுணர்கள் மூலமாகவும், விலையுயர்ந்த புத்தகங்கள் மூலமாகவும், பல பத்திரிகைகளின் மூலமாகவும் ஏராளமான கைத்தொழில் முறைகளைக் கற்றுக்கொண்டு அவற்றை அனுபவத்தில் செய்துபார்த்துச் சித்தியடைந்திருக்கிறோம். அவற்றுள், 12 தொழில் முறைகளைமாத்திரம் நம் தேசமுன்னேற்றத்தைக் கருதி 200 நண்பர்களுக்கு இனாமாய்க் கற்றுக்கொடுக்க உத்தேசித்திருக்கிறோம்.

அத்தொழில் முறைகளாவன :—

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சோப் செய்யும் முறை. இதைக் கற்றுக்கொடுக்க | ரூபா | 11 | 8 |
| 2. | ரப்பர் ஸ்டாம்பு செய்யும் முறை. | ,, | 20 | 0 |
| 3. | செயற்கைத் தங்கம் செய்யும் முறை. | ,, | 25 | 8 |
| 4. | பச்சைக்கற்பூரம் செய்யும் முறை. | ,, | 5 | 8 |
| 5. | ரோமசங்காரி செய்யும் முறை. | ,, | 3 | 8 |
| 6. | வைத்தியாஞ்சனம் செய்யும் முறை. | ,, | 4 | 8 |
| 7. | வைத்திய ரசம் செய்யும் முறை. | ,, | 5 | 0 |
| 8. | சர்வதேள் சஞ்சீவி செய்யும் முறை. | ,, | 4 | 8 |
| 9. | பரிமள கூந்தல் தைலம் செய்யும் முறை. | ,, | 8 | 0 |
| 10. | வெள்ளி கில்டு கொடுக்கும் பொடி செய்யும் முறை. | ,, | 2 | 8 |
| 11. | உயர்ந்த பற்பொடி செய்யும் முறை. | ,, | 3 | 8 |
| 12. | புளூ பிளாக்கிங் செய்யும் முறை. | ,, | 6 | 8 |
| | ஆக 12 தொழில் முறைகளையுங் கற்றுக்கொடுப்பதற்கு ஏற்படுத்தியுள்ள தொகை ... ... ... | ரூபா... | 100 | 8 |

ஆயினும், நம் தேசத்தின் தற்கால நிலைமையை யுத்தேசித்து இதனை இனாமாகக் கற்பித்துக்கொடுக்க உத்தேசித்திருக்கிறோம். என்றாலும் விளம்பரச்செலவு, ஆபீஸ்சிப்பந்திச்செலவு முதலிய விருப்பதால் ரூபாய் 10 மாத்திரம் மணியார்டர் செய்தனுப்பி ஷை தொழில்முறைகளைப் பெற்றுக் கொள்ளுமாறு வேண்டுகிறோம். ரூபாய் ஆயிரம் கொடுத்தாலும் உண்மை

யான தொழில் முறைகள் கொடுப்பது அரிதாகிய இக்காலத்தில் உண்மையும், அனுபவமுமுள்ள 12 தொழில்முறைகள் ரூபா 10-க்குக் கிடைப்பதைத் தவறவிடாதீர்கள்" என்று குறிப்பிடப்பட்டிருந்தது. இதைப் பார்வையிட்ட இரண்டொரு தினத்தில் அவருடைய விருப்பத்தின்படியே ரூபாய் 10 அனுப்பி, குறித்த தொழில்முறைகளை வரவழைத்தோம். அவற்றுள் விளம்பரக் குறிப்புக்கு மாறாக 11 தொழில்முறைகளடங்கிய சில துண்டுப் பிரசுரங்களை வைத்தனுப்பியதோடு கைவசமில்லாததால் ஒன்றை அனுப்பத் தவறியதாகவும் அதனைக் கூடிய சீக்கிரத்தில் அச்சிடுவித்து அனுப்பிவைப்பதாகவும் பதிலெழுதி யிருந்தது. நிற்க,

இவ்வித வியாபாரத்தை யுடையவர்களா யிருந்தபோதிலும் கைவசமில்லாத ஒன்றைப்பற்றிப் பத்திரிகைகளில் விளம்பரஞ் செய்யலாமா? "கைவசமில்லாததால் அச்சிடுவித்து அனுப்புவோ"மென்று எமக்குப் பதிலனுப்பியபின்னரும் 'லோகோபகாரி" "சுயராஜ்யா" முதலிய பத்திரிகைகளிலும் அவ்விளம்பரஞ் செய்யப்பட்டிருந்தது. அந்த விளம்பரத்தைக் கண்டெழுதியவர்களுக்கெல்லாம் "கைவசமில்லாததால் அச்சிடுவித்து அனுப்புவோம்" என்ற பதிலே கிடைத்திருக்கும்? அதற்கிடையில் அச்சாய் முடிந்து கடிதமெழுதினவர்களுக்கு ஒழுங்காயனுப்பக்கூடுமென்றால் முதலாவது பணஞ்செலுத்திய எமக்கும் சிலநாட்களின் பின்னாவது அனுப்பியிருக்கலாமே? இந்நாள்வரை எதிர்பார்த்துங் காணவில்லை. இஃதிங்ஙனமிருக்க,

அனுப்பிய தொழில்முறைகளை ஆராய்ச்சி செய்ததில் 2-ம், 7-ம், 8-ம் இலக்கத்திலுள்ளவை நீங்கலாக மற்ற முறைகள், சிறுமணவூர் முனிசாமி முதலியாரால் எழுதப்பட்ட "சுகந்த பரிமள சாஸ்திரம்", திருச்சூர் பி. எ. ஐயரால் எழுதப்பட்ட "வர்த்தகமித்திரன்", ஓர் முஸ்லீம் சகோதரரால் எழுதப்பட்ட "சூக்ஷ்ம கைத்தொழில் சாஸ்திரம்" என்னும் நூல்களிலுள்ளவையாயும், ஆசிரியர் நாமம் முதலியவையின்றி "கைத்தொழில் சாஸ்திரம்" என வழங்கும் நூலிலுள்ளனவாயுமிருக்கின்றன. மேற்படி நூல்களின் விலைகளும் முறையே 12 அணாவாகவும், 10 அணாவாகவும், $1\frac{1}{2}$ ரூபாயாகவும், 1 ரூபாயாகவும் விதிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் ஒவ்வொன்றிலும் அடங்கிக்கிடக்கும் தொழில்முறைகளும் நூற்றுக்கணக்கானவையாயிருக்கின்றன. அங்ஙனமாகவுள்ள நூல்களைக் குறைந்த விலைக்கு விற்றவர்களை அல்லது விற்பவர்களைப் பரோபகாரிகளென்று சொல்வதா? அன்றி, அதிலுள்ள 12 முறைகளைப் பொறுக்கியெடுத்து 10 ரூபாயாக விற்பவர்களைப் பரோபகாரிகளென்று சொல்வதா? என்பதை இதை வாசிக்கும் நேயர்களே உற்று நோக்குவார்களாக.

இதன்கணுள்ள நான்கு படுமோசங்கள்.

(1) தேச முன்னேற்றத்தைக் கருதி அனுபவ தொழில் முறைகளை இனமாயனுப்புவதாக விளம்பரஞ்செய்து, பின்னர் 10 ரூபாய் வேண்டியதாய் விரும்பியது.

(2) விரும்பியபடியே 12 தொழில்முறைகளுக்கும் 10 ரூபாயனுப்பியும் ஒன்று கைவசமில்லையென்று 11 முறைகளையனுப்பியது.

(3) அனுப்பப்பட்ட 11 தொழில்முறைகளும் புதியவையாயில்லாது நம் தேசத்தில் முன்னரே பலரால் வெளியிடப்பட்டவையா யிருத்தல்.

(4) முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைத்தவாறு 12 தொழில்முறைகளுக்கும் 10 ரூபாய்க் கட்டணம் விதித்திருத்தல்.

இவ்வித பரோபகாரத்தை மேற்கொண்ட விளம்பரதாரர் ஓர் சாமான்யமானவருமல்ல; "சிவகங்கைத் தொழிற்கல்விச்சாலை"யின் அதிபரும், பல நூல்களுக்கும் "மாயாவி" என்னும் பத்திரிகைக்கும் ஆசிரியருமானவர். இப்பெரிய மதிப்பையுடைய இவரது செயல் இதுவானால், பேரவாவின் வயப்பட்டுழலும் என்போல்வாரது செயலைப்பற்றி முறையிடுவது யாரிடம்? இதுபோன்ற ஏய்ப்பான விளம்பரமொன்று நம் ஆனந்தபோதினியில் வெளியாக்கப்பட்டு அதன்மூலமாய் அனேகர் அபஜெயமடைந்தார்கள். ஆகவே, இவ்விஷயத்தை நாம் எழுதத்துணிந்தது தொழில்முறைகள் பொய்யென்றுரைவது, ஒன்றைக் குறைத்துக்கொண்டதைப்பற்றியாவது விவரித்துக்காட்டவல்ல; 2 அணு பெறக்கூடிய 12 தொழில்முறைகளை 10 ரூபாயாக விற்பதுபற்றியும் அதனால் எவ்வளவு நபர்கள் ஏமாறக்கூடும் என்பதைப்பற்றியுமேயாகும். மேற்கூறிவந்த விஷயங்களின் பொய் மெய் அறிய விரும்புவோர் இதில் கூறியுள்ள நூல்களைக் கொண்டு ஒப்பிட்டுப் பார்க்கும்படி மிகப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கா. க. தனபாலன், பாளம்பாக்கம்,
கனியம்பாடி, N. Arcot.

குறிப்பு:—விளம்பரங்கள் உண்மையானவையாயிருந்தால் அவற்றை வெளியிடக் கருதியவர்க்கும் பத்திரிகைகளிற் பிரசுரித்தவர்க்கும் அவை நற்பேரளிக்கும். நமது நண்பர் கூறிய விளம்பரம் பல பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டமையின் நாமும் அதனை நம் பத்திரிகையில் வெளியிடலானோம். அது வாக்கு நாணயம் அற்றதென்று கேள்விப்பட வருந்துகிறோம். இனி இத்தகைய விளம்பரங்களை எமக்கனுப்பாதிருக்கப் பொதுப்பட விளம்பரதாரர்களைக் கேட்டுக்கொள்ளுகிறோம். ப-ர்.

---

## பகவத்கீதை வசனம்.

(133-ம் பக்கத் தொடர்ச்சி.)

[ஸ்ரீ பகவான் இவ்வண்ணம் தாமதத்தியாகத்தை யியம்பியருளி இப்போது இராஜதத்தியாகத்தை யுரைக்கத்தொடங்கல்.]

ஹே அர்ச்சுன! இக்கருமம் துக்கரூபமேயென்றெண்ணிச் சரீர ஆயாசத்தின் அச்சத்தாலே நித்தியகருமத்தை விடுதலாகிய தியாகம் இராஜசமாம். இந்தத் தியாகத்தாலே தியாகபலத்தை அவன் ஒருகாலும் அடையான்.

ஹே கௌந்தேய! முன் மொழிந்த மோகமில்லாவிடினும் மனத்தூய்மையை மருவாத கரும அதிகாரி சருவ நித்திய கருமங்களும் துக்கரூபமேயாமென நினைந்து அவற்றைச் செய்தலாலுண்டாம் சரீரக் கிலேசத்தின் பயத்தாலே, அவற்றை விடல் இராஜசத் தியாகமாம். அந்தத் துக்கம் இரஜோகுண ரூபமேயாம். மோகமில்லாவிடினும் இராஜசத் தியாகத்தாலே பயன் அடைய முடியாதாம். கூறப்பெறும் சாத்விகத் தியாகத்தின் ஞான நிஷ்டா வடிவமாகிய பயனை இராஜசத் தியாகி யடையான்.

[முன்னிரண்டு சுலோகங்களாலே நித்திய கருமங்களின் இராஜச தாமதத் தியாகங்களை விடவேண்டுமென்றருள, ஆயின் எக்கருமத் தியாகத்தை யதிகாரி யங்கீகரிக்கவேண்டும் என்று தெரிந்துகொள்ளும் வேட்கையானது அருச்சுனனுக்குண்டாகியபோது சாத்விகத்தியாகமே கொள்ளத்தக்கதாம் என்று ஸ்ரீ பகவான் அதன் வடிவத்தை யருளல்.]

ஹே விஜய! இக்கருமம் செய்யத்தக்கதேயாம் என்றெண்ணி நித்திய கரும சங்கத்தையும் பலத்தையும் தியாகித்தே செய்வது சாத்விகத் தியாகமெனப் பெரியோரால் அங்கீகரிக்கப்பெறும்.

ஹே பார்த்த! நித்தியகருமங்களை விதிக்கும் வாக்கியங்களில் அவற்றின் பயன் சொல்லாவிடினும் வேதவிதிதமாதலின் நித்திய கருமங்கள் அவசியம் செய்யத்தக்கவை என்று நிச்சயித்து, யான் செய்கிறேன் என்னும் அபிமானத்தையும், சுவர்க்காதிபலத்தையும் விட்டுச் சித்தசுத்தியுண்டாம் பரியந்தம் அவற்றைச் செய்தலாகிய தியாகம் சாத்விகத் தியாகமாம் என்பர் ஆன்றோர். பலத்தின் ஆசையையும் அபிமானத்தையும் விட்டுச் செய்யும் நித்தியகருமம் உளத்தூய்மையையுண்டாக்கும் என்பதாம். முன்னர் தள்ளி விட்ட இரண்டு தியாகங்கள்போல இச்சாத்விகத் தியாகம் தள்ளத்தக்கதன்றாம். சுவர்க்கம் விரும்பியவன் யாகம் செய்க வென்பதாதி வசனம் பயனை யுத்தேசித்துக் காமியகருமத்தை விதிப்பதேபோல நித்தியகருமத்தை விதிக்கும் வசனம் அப்பயனைக் குறித்து அதனை விதியாதாதலின் அதற்கொரு பலமுமேயின்றாம்; இலதாகவே, பலத்தைவிட்டு என ஸ்ரீ பகவான் அருளியது எங்ஙன் கூடுமெனின்? இங்ஙனமாம். நித்தியகரும வசனம் பயனைக் குறித்து அதனை விதிக்கவில்லை யெனினும் அதற்கொரு பயனை யின்றியமையாது கோடல்வேண்டும்; அல்லாவிடிற் பயனைவிட்டு என்றருளியது வீணாம். அடைவுற்றதற்கே விலக்குதலுங் கூடுமென்பர்; ஆகலின் அதற்குமொரு பலமுண்டென்றன்றோ அம்மொழியாற் கிடைக்கின்றது. பயனைக்குறியாமல் மந்தனும் முயலான் என்றபடியால் அறிஞன் எங்ஙனம் முயல்வன், முயலான். ஆகவின் முயலும்பொருட்டுப் பயனை யவசியம் அங்கீகரித்தல்வேண்டும். ஆபஸ்தம்ப இருடியும் அதன் பயனை யறைந்துளார். மாங்கனியடைவின்பொருட்டு மாமரம் வைத்தவனுக்கு அத்தரு நிழல் வாசனை முதலிய பயனையும் அவசியம் தருவதேபோல தனது தருமம் என்றெண்ணி நித்தியகரும அனுஷ்டானஞ் செய்யின் மோக்ஷ முதலிய பிரயோஜனம் அவசியம் உண்டாம்; இப்பயன், பெரும்பயன் பெறுவதற்கு முன் விருப்பிலாமலே எய்தும் தொடர் பயன் எனப்படும். மனத்தூய்மை வாயிலாக ஆன்மஞானப் பிராப்தியாலே மோக்ஷம் பிராப்தியாம். இதுவே நித்தியகருமத்தின் மகாபலமாம். இஃதுரூத வரையும், அதனால் அவசியம் அத்தொடர் பயனுமென்க. நித்தியகருமங்களைச் செய்யாவிடில் எப்பாவமுளதாமோ, செய்யின் உண்டாகாதோ, அப்பாவ நீக்கமே அதன்பயனும். நித்தியகருமஞ் செய்யாவிடின் பாவமுண்டாமென்பது சுருதிமிருதியாற் பிரசித்தமாம்:—"வேதங் கூறிய நித்திய வினைகளைப் பாதகன் செயானேற் பாவமடைவான், வேதமும் மிருதியும் விளம்பு நித்தியங்களை, நீதமாய்ப்பற்றியே துவிஜனிலைப்பன், ஓதிவை விடுத்த துவிஜன் ஒருதலை, கோதுறக் கீழ்விழுவன் கோலிலாப், போதகக்குருடன் குழிவிழல்போன்றே", "ஒரு நாள் ஜபத்தைச் சந்தியை மூன்று, திருநாள் அக்கினிஹோத்திரம் பத்தொடும், இருநாள் விடின்மறையவன்சூத்திரனும், குருவாணையையு மிதிற்குலவாதே", "மறையவன் மூன்றுநாள்வரைச சந்தியைத்தான், அறையன்னிருதினமக்கினிகோத்திரம, உறசெயாதிருப்பின் ஓதினும் வேதம், மறையவன் சூத்திரன் மருவாதையமே."

"சந்தியையுல்லங்கனஞ் செய்தலானே பிராஹ்மணன்பால் சூத்திரத்தன்மை அடைவுண்டாதலின் ஒருகாலும் சந்தியை யுல்லங்கனஞ்செய்யலாகாது. காலையிலும் மாலையிலும் சாவதானனாகிச் சந்தி செய்க; பிரமாதத்தால் விடின், நிச்சயமா யவன் நரகத்தையடைவன்" என்பதாதி சுருதி

மிருதி வசனங்கள் நித்தியகருமத்தைச் செய்யாவிடின் பாவ அடைவைக் கூறியுள்ளன. அக்கினிஹோத்திராதி நித்தியகருமத்தானே தடையாய பாவத்தை நீக்குகவென்பதால் வேதவேத்தாக்கள் நித்திய தருமத்தைப் பரம தருமமென்பார்கள் என்பதாதி சுருதிகள் ஞானத்தடையாய பாவநீக்கம், ஞானமுண்டாக யோக்கியமாகிய புண்ணிய ஆக்கம், என்னும் ஆன்ம சமஸ்காரமே நித்தியகரும பலமாம் என்று கூறும். சில சாஸ்திரங்களிலோ நித்திய கருமத்திற்குப் பிரஹ்மலோகப் பிராப்தி வடிவமான பலம் பகரப் பெற்றுளது. "திரவிரதத்தொடுஞ் சேர்ந்தவராகி, யுரமுறச் சந்தியை யுபாசனை செய்பவர், சருவபாபங்களுஞ் சாம்பினராகி, பிரமலோகத்தைப் பெரிதெய்துவாரே" என்பதாதிய சுருதி மிருதி முதலியவற்றில் நித்தியகருமத்திற்கும் பலங்கூறப் பெற்றுளது. அப்பலத்தை யாசைப்படாமலே யதனைச் செய்க வென்னும் திருக்கருத்தாலே ஸ்ரீ பகவான் ஈண்டுப் பலத்தை விடுத்து என்பதால் நித்திய கரும பலத்தின் பரித்தியாகத்தைக் கூறியருளினர். ஆகலின் ஸ்ரீ பகவத் வசனத்தில் ஒரு சிறிதும் முரணின்றாம். தியாகசந்யாச சப்தங்கள் கட பட சப்தங்கள்போலப் பின்ன பின்ன ஜாதியையுடைய அர்த்தவாசகங்களல்லவாம். மற்றோ, பலேச்சா பூர்வகமாகிய கருமத்தியாகமே இரு சப்தங்களின் பொருளாம். முற்கூறிய இப்பொருளை மறவாதுறைக. பல இச்சையிருந்தபோதினும் முன்மொழிந்த மோகவயத்தால் அல்லது தேகக்கிலேச பயத்தால் நித்தியகருமப் பரித்தியாகமோ, கருமமாகிய விசேஷிய அபாவத்தாலாகிய விசிஷ்ட அபாவரூபமாம். அந்தத் தியாகம் தாமச இராஜசமென நிந்திக்கப்பட்டதாம். நித்தியகருமமிருந்தபோதினும் அதன் பல விருப்பத்தை விடுந் தியாகம், பலேச்சையாகிய விசேஷணாபாவத்தாலாம் விசிஷ்ட அபாவமாம். இத்தியாகம் சாத்விகத்தன்மையாலே துதிசெய்யப்பெற்றதாகும். இரண்டபாவங்களிடத்தும் விசிஷ்டபாவத்தன்மை சமமேயாமாதலின் ஸ்ரீ பகவானுடைய திருவாக்கியத்தே பூர்வ அபரவிரோதமின்றாம்.

[இப்போது முன்னுரைத்த சாத்விகத் தியாகத்தைக் கொள்ளும் பொருட்டு ஸ்ரீ பகவான் அதன், மனத்தூய்மை வாயிலாய் ஞானநிஷ்டை வடிவப் பலத்தை யருளிச்செய்தல்.]

ஹே அர்ச்சுன! முன் மொழிந்த சாத்விகத்தியாகமுடையவன் சத்துவத்தால் வியாப்தமாம்போது தத்துவஞானமுடையவனுவன், சர்வ சம்சயங்களுமற்றவனுவன். அப்போது அசோபன கருமத்தைப் பிரதிகூலமென்னுன்; சோபனகருமத்திற் பிரீதியுஞ் செய்யான்.

ஹே பாண்டவ! சாத்விகத்தியாகி—முன்னர்க் கூறியவகையே கர்த்திருத்துவ அபிநிவேசத்தையும் சுவர்க்காதி பல இச்சையையும் பரித்தியாகித்து மனத்தூய்மையின்பொருட்டு வேதவிகிதநித்திய கருமத்தை யனுஷ்டானஞ் செய்யும் தியாகி, அக்காலத்தில் சத்துவத்தாலே நன்கு கூடியவனுவன். ஆன்ம அனுன்ம விவேக ஞானஹேது பூதமாகிய உள்ளத்துள்ள நன்ஞானத்தின் றடையென்னும் இரஜதமரூபமான மலமிலாமை வடிவ அதிசயத்தகைமை சத்துவமாம்; அதனுல் இனிது வியாபிக்கப்பெற்றவனுவன் என்பதாம். சாற்றிய சத்துவ வியாப்தியாலே நியமமாக ஆன்ம ஞானரூப பல ஜனகத்தன்மையே நலமுடைமையாம். ஸ்ரீ பகவானுக்கருப்பணஞ் செய்த நித்தியகரும அனுஷ்டானத்தாலே பாவரூப மலநீக்கமாகிய சமஸ்காரத்தானும், ஞான உற்பத்தி யோக்கியதை வடிவ புண்ணிய முண்டாவதாகிய சமஸ்காரத்தானும், சமஸ்கரிக்கப்பெற்றபோது அத்தியாகி

மேதாவியாவன். விவேகம், வைராகம், சமதமாதி யாறு சம்பத்து, முமுக்ஷுதை, சர்வகருமங்களின் விதிவத்தாய தியாகம், பிரஹ்ம வேத்தாவாகிய ஆசிரியன்பாற் செல்லுதல் என்பதாதி சாதனங்களானும், ஞான ஆசிரியர் வாயிலாக வேதாந்தசாஸ்திர சிரவணமனன நிதித்தியாசனமென்னும் மூன்று சாதனங்களானும் உண்டாயதும், தத்துவமசி முதலிய வேதாந்த மகாவாக்கியத்தைக் காரணமாகவுடையதும், எல்லா அப்பிரமாணிய சங்கையும் நீங்கியதும், அகண்ட அத்விதீய சைதன்யமலாத வஸ்துவை விடயஞ் செய்யாத அகம்பிரஹ்மாஸ்மி யென்னும் பிரஹ்மாத்ம ஐக்கியஞானம் மேதையாம். அம்மேதையோடு கூடியவனே மேதாவியாவன்; அவனே திடப் பிரஞ்ஞனுவன்; அக்காலத்தே அவன் ஐயமெல்லாம் நீங்கியவன் ஆவன். பிரஹ்மவித்தை வடிவ மேதையாலே அவித்தை நீங்கிவிடும்; அதுவே சருவ சமுசய உற்பத்தியைச் செய்துகொண்டிருந்தது; அது தொலையவே காரிய ஐயம் திரிபுகள் யாவும் தத்துவ வேத்தாவிற்கு இலவாகும். ஆன்மசாக்ஷாத்காரத்தாலே அவித்தை நீக்க வாயிலாய் நீங்கும் ஐயங்களிவையாம்:—சஞ்சித ஆகாமிய வர்த்தமானங்கள் என்னும் மூவகையாகிய கருமங்களுள் ஏதேனும் என்னைப்பற்றியுளதா? இலதா? கருத்திருத்துவ போக்திருத்துவ முதலிய சமுசாரம் ஆன்மாவிற்கா? அந்தக்கரணமாகிய அநான்மாவிற்கா? மோக்ஷகாரணம் யோகமா? உபாசனையா? கருமமா? ஆன்மசாக்ஷாத்காரமா? சாலோக்கியம், சாமீப்பியம், சாயுச்சியம் என்னும் இவையே மோக்ஷமா? பிரஹ்மான்மரூபமாய் நிலைபெறல் மோக்ஷமா? இவ்வெல்லா ஐயத்துள்ளும் ஈற்றது சித்தாந்தமென்றறிந்துகொள்க; மற்றவை பூர்வபக்ஷங்களாம். இவ்வையங்களும், தேகாதிகளில் ஆன்மமதி வடிவ விபரீதமும், தத்துவமறிந்தவன் அற்றவனுவன்; அப்போது சருவ கருமமும் அற்றவனுகலின், அகுசலகருமத்தில் துவேடஞ்செய்யான். அஞ்ஞானிகட்குப் பந்தவேதுவாதலின் அசோபனரூப காமிய கரும நிஷித்த கருமங்களைப் பிரதிகூலமாகவெண்ணன்; மனத்தூய்மைவாயிலாய் ஆத்மஞான வேதுவாதலின் சோபனரூப நித்தியகருமத்திலும் பிரீதியைச் செய்யான். அவன் கிருத கிருத்தியனுதலின் அவனுக்கு ஒரு கருமத்தில் துவேடமும், மற்றொரு கருமததிற் பிரீதியும் எங்ஙனமுண்டாம் என்னு மிதன்கட் சுருதியுமுளதாம்:—"பராபரமாம் அப்பொருளை வயங்கக்கண்டால், பெருமனககட்டறு மையமறும் கருமமறும்" யான் பிரஹ்மரூபன் எனப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடைந்த தத்துவ வித்திற்குச சிற்சடக்கிரந்தி பேதிக்கும்; முன்மொழிந்த சர்வசமுசயங்களும் நீங்கும்; புண்ணிய பாவ சர்வ கருமங்களும் க்ஷயமாம். அந்தச் சாத்விகத்தியாகத்திற்கு இம்மகா பலங் கிடைத்தலின் அதிகாரி பெருமுயற்சியால் சாத்விகத்தியாகத்தையே சம்பாதிக்கவேண்டுமென்பதாம். (தொடரும்.)

சீடன்.

---

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்
### (134-ம் பக்கத் தொடர்ச்சி.)

அதன்பிறகு லாயரும் ஆனந்தலிங்கும் எப்போது சந்திப்பதென்று ஏற்பாடு செய்துகொண்டு சற்று நேரங்கழிந்து பிரிந்து சென்றார்கள்.

ஆனந்தலிங் ஒரு படகில் அம்பாலிகையின் உருவத்தை யொரு நிலைக் கண்ணடியில் கண்டதாய்க் கூறினேமல்லவா, அப்படகிற்கே அவன் மறுநாள் சென்றான். இடையில் நன்றாய்ச் சிந்தித்தபோது "நாம் கண்டது மெய்யான உருவத்தின் பிரதிபிம்பமாகவே யிருக்கவேண்டு"மென்று அவன்

மனதிற்பட்டது. அவ்வாறே யவன் அங்கு மிக்க அபூர்வ அதிசயத்தையே காண்கிறான்.

அப்படகு ஹூரியாற்றின்மேலும் கீழுமாய்ச் சென்றுகொண்டே யிருப்பது. கரையிலுள்ள நகரங்களி லெல்லாம் தங்குவது. ஆனந்தஸிங் தன்னிடம் அம்பாலிகையின் புகைப்படம் ஒன்றைவைத்துக் கொண்டிருக்கிறான். அதன்படி அம்பாலிகை தன் கழுத்தில் அதிவிசித்திரமான வேலைசெய்யப்பட்ட ஒரு பதக்கத்தை யணிந்துகொண் டிருக்கிறாள். அதைப்பற்றி அவன் பவானியைக் கேட்டபோது, அவள் அம்மாதிரி வேலைசெய்யப்பட்ட பதக்கம் உலகில் வேறெங்கு மில்லையென்று கூறினாள்.

ஆனந்தஸிங் படகுக்காகச் சென்று துறைமுகத்தில் நின்றான். அச்சமயம் படகு நேரங்கழித்து வந்தது. அது வந்தவுடனே ஜனங்கள் அதிகமாய் இறங்க ஆரம்பித்ததால், ஆனந்தஸிங் சற்று நிதானித்து மெதுவாய் ஏற ஆரம்பித்தான். அச்சமயம் படகிலிருந்து ஒரு அழகிய மாது கீழே யிறங்க ஆரம்பித்தாள். அவள் உருவத்தைச் சற்று நிதானமாய்ப் பார்த்ததே யவன் திடுக்கிட்டு நின்றான். ஏனெனில் அவள் கழுத்தில் அணிந்திருந்த பதக்கம் அவனுக்கு வியப்பை யுண்டாக்கிற்று. ஏனெனில் அது அம்பாலிகை யணிந்திருந்த பதக்கம் என்றே யவன் மனதிற்பட்டது.

உடனே யவன்மனதில் ஒரு தீர்மான முண்டாயிற்று. ஆதலால் இப்போது படகில் ஏறிச்செல்வது அவ்வளவு அவசியமல்லவென்று கருதி அந்த ஸ்திரீயின்பின் தொடர்ந்தான். அவள் ஒருவீதிக்குச்சென்று டிராம் வண்டியில் ஏறினாள். ஆனந்த ஸிங்கும் அவ்வண்டியில் ஏறிக்கொண்டான்.

அம்மாது சற்றுதூரம் சென்று ஒரு வீதியில் இறங்கினாள். அதைக் கண்ட ஆனந்தஸிங் "ஆ! இப்படித்தான் நினைத்தேன்" என்று தனக்குள் கூறிக்கொண்டான். அவன் வண்டியில் வரும்போதே அம்மாதை யுற்றுப் பார்த்து அவள் யாரென்று தெரிந்து கொண்டான். எப்படியெனில் சுமார் பத்து வருடங்களுக்கு முன் அவன் மிக்க பேர்பெற்ற ஒரு கள்ளப் பத்திரம் பிறப்பிக்கும் குற்றவாளியை இரவில் ஒரு ஹோட்டலில் கைது செய்தான். அப்போது அவனோடுகூட ஒரு அழகிய கன்னிகையிருந்தாள். அவளே யிவள் என்று ஆனந்தஸிங்கின் புத்தியிற்பட்டது.

ஆனந்தஸிங் அம்மாது இறங்கிய விடத்திற்குச் சற்று தூரத்திற்கப்பால் தானும் இறங்கி நேராய் கறுப்பண்ணன் வீட்டின் எதிரில் சென்று மறைவில் நின்றான். இரண்டு நிமிடங்களுக்குள் அம்மாது கறுப்பண்ணன் வீட்டிற்குள் நுழைவதைக் கண்டதும், "சரிபோதும்" என்று கூறிவிட்டு நேராய்ப் படகு இருக்கும் இடத்திற்குத் திரும்பிவிட்டான்.

அச்சமயம் படகில் அதிக ஆட்களில்லை. வெளியில் சென்றிருப்பவர்கள் வருவதற்காகப் படகு காத்துக்கொண்டிருக்கிறது. ஆனந்தஸிங் முன்பு தான் பிரதிபிம்பத்தை நிலைக்கண்ணாடி யெதிரில் நின்று, பிரதிபிம்பத்திற்குக் காரணமாகிய உருவம் எங்கிருந்தால் இப்படிப் பிரதிபிம்பம் தோன்றுமென்று யோசித்து அந்த உருவம படகிலுள்ள போஜனகூடத்தில் அச்சமயம் நின்றிருக்க வேண்டும் என்று கண்டறிந்தான். அக்கூடத்தின் வாயிற்படி யருகில் ஆள் நின்றால் அக்கண்ணாடியில் உருவம் தோன்றும். கதவைமூடி விட்டால் உடனே உருவம் மறைந்துவிடும். இவ்விஷயங்களை யறிந்துகொண்டதே, "சரி, அன்று நாம் கண்டது அம்பாலிகையின் உருவமே. அச்சமயம் அம்பாலிகை யிப்படகில் இருந்தனள்" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

இரண்டொரு நிமிடங்களுக்குப்பின் படகில் பிரயாணம் செய்யும் ஸ்திரீகளுக்கு வேண்டிய விஷயங்களைப்பற்றிக் கவனிக்கும் காரியஸ்தி அவன் கணகளுக்குப் புலப்பட்டாள். முன் முறை அம்பாலிகையை யவன் தேடவந்தபோது இம்மாதே அத்தகைய கன்னிகை படகில் இல்லவே யில்லையென்று கூறினவள்.

ஆனந்தஸிங் அவள் அருகிற்சென்று “ நான் உனக்காகத்தான் காத்துக்கொண் டிருக்கிறேன் ” என்றான்.

அதைக்கேட்ட அம்மாது அவன் தன்னைக் கேலிபண்ணுவதாய் நினைத்துக்கொண்டு, கோபத்தோடு “ இதோபார் ! என்னிடம் இச்சேஷ்டையுதவாது; கப்பித்தான் சமீபத்திலேயே தான் இருக்கிறார் ” என்றாள்.

ஆனந்:—“ ஒரு சமயம் கப்பித்தானைக் கூடக் கைதுசெய்ய நேரிட்டாலும் நேரிடும் ” என்றான்.

இதைக்கேட்டதே அம்மாது திகிலடைந்து “ என்ன ? கைதுசெய்வதா ?” என்றாள்.

ஆனந்:—“ ஆம். இப்போது உன்னைக்கைதுசெய்வதற்காகவே நான் இங்கு வந்திருப்பது.

அம்மாது ஏன் என்றாள். ஆனந்தஸிங் “ உன்னை ஸ்டேஷனுக்குக் கொண்டுபோனதே அங்கு எல்லாச் சங்கதியும் தெரிந்து கொள்வாய் ” என்றான்.

அம்மாது கொஞ்சம் அறிவுள்ளவள். நவீனபுரியில் பிறந்தது முதல் வசிப்பவள். அதோடு தான் மனமறிந்து ஒரு குற்றமும் செய்தவளல்ல. ஆகையால் ஆனந்தஸிங்கை நோக்கி “நீயேதோ தவறாக எண்ணிக்கொண் டிருக்கிறாய் ” என்று பயப்படாமல் கூறினாள்.

ஆனந்:—அப்படியில்லை.

அம்மாது:—“ நீ போலீஸ் உத்தியோகஸ்தனோ ?” என்றாள்.

ஆனந்தஸிங் உடனே தன் பதக்கத்தைக் காட்டினான். அம்மாது-“ வாரண்ட் கொண்டுவந் திருக்கிறாயோ ?” என்றாள்.

ஆனந்தஸிங்:—எனக்கு வாரண்ட் அவசியமில்லை.

அம்மாது:—அப்படியாயின் என்னைக் கைதுசெய்ய முடியாது.

ஆனந்:—செய்யக்கூடும்.

அம்மாது:—வாரன்டின்றி யெப்படிச செய்வாய் ?

ஆனந்த:—சில குற்றங்களுக்கு வாரன்டில்லாமலே பிடிக்கலாம்.

(தொடரும்.) ஆரணி குப்புசாமி முதலியார்

---

## பொது சமாச்சாரங்கள்.

### ஓ ர றி வி ப் பு.

‘ வினாவுக்கு விடைதேவை ’ என்று சென்ற புரட்டாசிமாத சஞ்சிகையில் வெளியிட்டதற்கு விடையாக ‘மதுரை’ எனப் பலர் எழுதியிருக்கின்றனர். முதலாக இவ்விடையை நேரில் எழுதிவந்தவர், சென்னை, பவழக்காரத்தெருவி லிருக்கும் ஒரு நண்பராவார். இந்த விடை வினாவிற்குப் பொருந்தவில்லை யென்று இவருக்குச சொல்லி யனுப்பிவிட்டோம். வினாவியவர் இடையின, வல்லின, மெல்லின எழுத்துக்களை முறையே கொண்ட ஒரு சொல்லைத் தமது கருத்தில் வைத்திருப்பாரென்று அவருக்குஇரண்டு முறை கார்டு எழுதியும் பதில் இல்லை. அல்லாமலும் தஞ்

சைக்கு நேரே அவருக்கு அநேகம் விடைக்கடிதங்கள் போய் போஸ்டாபீ ஸில் கிடக்கின்றன வென்றும், தஞ்சையில் அவரைத் தேடிக் கண்டுபிடிக் கக்கூடவில்லை யென்றும் போஸ்டாபீஸார் எமக்குத் தெரிவித்து அவரு டைய மேல்விலாசத்தை எழுதிக்கொண்டு போயிருக்கின்றனர்.

வினுவே தப்பாயிருக்கு மென்று எமக்குத் தோன்றுவதால், மதுரை என்று முதலில் எழுதிய மேற்படி நண்பருக்கு நாங்களே இனுமாக ஆனந்த போதினி சஞ்சிகையை ஒருவருடம் கொடுத்துவர இஷ்டமானேம். அவர் நேரில்வந்து பெற்றுக் கொள்ளலாம். இனி இத்தகைய ஆதாரமற்ற விளுக்களுக்கு எமது பத்திரிகை இடந்தராது. ப-ர்.

* * * * *

மலாய் நாட்டில் "ஆனந்தபோதினி"

நமது "ஆனந்தபோதினிக்கு" சந்தா சேர்க்கும்பொருட்டு, அதன் ஏஜண்டாக ஸ்ரீ இராமானுஜாசாரியார் என்பார், மலாய் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்கிறார். நம் "ஆனந்த போதினி"யை ஆதரிக்கவேண்டுவது ஒவ்வொரு தமிழர்களுக்கும் முக்கிய கடமை யென்பதைச் சிலர் மறந்து விட்டு அநேகஞ் சாககுப்போக்குகள், சொல்லுகிறார்கள். இது எவ்வளவு பரிதாபம். பத்துவருடங்களாக "ஆனந்தபோதினி" தமிழர்கட்குப் புரி ந்துவரும் பேருதவி எழுதுந்தரத்ததன்று. பின்னும் மலாய் நாட்டில் உள்ள ஒவ்வொருவரும் சம்பாத்திய முடையவர்களே. ஒரு வருடத்திய சந் தாத் தொகையாகிய, 86 சென்ட் அவர்களுக்கு ஒரு பெரிய தொகையல்ல. சிலவருடங்களுக்கு முன் இருக்குமிடந் தெரியாமலிருந்த, ஜப்பான் இப் பொழுது உன்னத நிலையிலிருப்பதற்குப் பத்திரிகையன்றோ முக்கியகார ணம். எத்தனேயோ தினசரி பத்திரிகைகளேயும் வாரப் பத்திரிகைகளேயும் ஆதரித்து, தேசத்தை முன்னேற்ற மடையச் செய்யவேண்டிய இந்தியர் கள் பத்திரிகைகள்மீது, ஆர்வஞ் செலுத்தாதிருப்பது அனுதாபமடைய வேண்டிய விஷயமன்றோ? இப்பொழுது ஏஜண்டு நேரில்வந்திருப்பதுபற் றியும், அதுபற்றிச் சில நண்பர்கள் சொல்வதுபற்றியும் அநேக நண்பர்கள் சந்தாதாரராகச் சேர்ந்துள்ளார்கள். ஆனுல் இவ்வொருவருடமட்டும் ஆனந்த போதினிக்குச் சந்தாதாரராவதோடு நின்றுவிடாமல், ஜீவியசந்தாதாரராக வும், பலவருடங்கள் சந்தாதாரராக இருக்கவும், தமது நண்பர்களேயும் சந் தாதாரர்களாய்ச் சேரும்படி தூண்டவும் இங்குள்ளவர்கள் செய்வார்களா ஞல், தேசத்திற்கதனுல் பெரியதோர் லாபமுண்டு என்பதை நேயர்கள் சிந் திக்கும்படி வேண்டுகிறேம். எல்லாம்வல்ல இறைவனருளால் ஆனந்த போதினி நீடூழிவாழ்க. பழ-சுந்தரேச முதலியார்.

குறிப்பு:—நமது நண்பர் ஆனந்தபோதினியி னபிவிருத்தியின் பொரு ட்டு எடுத்துக்கொள்ளும் சிரத்தை நம்மாற்பெரிதும் பாராட்டுதற்குரியதே. மலாய்நாட்டில் போதுமான பத்திரிகைகள் பரவிவருவதாகத் தெரிய வில்லை. பத்திரிகைகளால் உண்டாககூடிய அனுகூலங்களை நமது ஆனந்த போதினியில் பல முறை வெளியிட் டிருக்கிறேம். அவற்றை மலாய் நாட்டிலுள்ள அன்பர்களனைவரும் அறிய வேண்டியதே. ஆதலால் மேற் படி நண்பரைப்போன்ற நண்பர்கள் அங்கு பலரிருப்பதால் எல்லோரும் ஒருமித்த மனதுடன் நமது ஆனந்தபோதினியை ஆதரிக்க முன்வருவார்க ளென்று நம்புகிறேம். நமது ஏஜண்டு அங்கிருக்கிறார். ஏற்கனவே நம் பத் திரிகைக்குச சந்தாதாரராகச் சேர்ந்துள்ளவாபோக, சேராதிருப்பவரும் நமது ஏஜண்டு மூலமாகச் சேர்ந்து பத்திரிகையை விருத்திக்குக் கொண்டு வருவார்களாக. ப-ர்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**துரோதன ௵ கார்த்திகை ௴—கலியுகாதி 5027, சாலிவாகனம் 1848.**

**பசலி 1335—கோல்லமாண்டு 1100-1101—ஹிஜரி 1344.**

**இங்கிலீஷ் 1925 ௵ நவம்பர் ௴—டிசம்பர் ௴.**

| கார்த்திகை | நவம்பர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம். | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | திங் | அ15-40 | விசா26-48 | ம26-48சி | கரிநாள், அரசப்ரதக்ஷணம் |
| 2 | 17 | செவ் | பிர10-33 | அனு23-18 | சி23-18ம | சந்திரதெரிசனம் |
| 3 | 18 | புத | துதி4-50 திரி58-45 | கேட்19-13 | சி19-13ம | அனுஷாகார்த்திகை 50-13, அவமாகம் |
| 4 | 19 | வியா | சது52-43 | மூல14-55 | சித்60 | மாசசதுர்த்தி விரதம் |
| 5 | 20 | வெ | பஞ்46-43 | பூரா10-30 | பி10-30சி | நாகபஞ்சமி, நாகபூஜை |
| 6 | 21 | சனி | சஷ்41-0 | உத்6-25 | சித்60 | சஷ்டி, சம்பாசஷ்டி |
| 7 | 22 | ஞா | சப்33-18 | திரு2-38 அவி59-23 | அ2-38மர | தனுராயனம் 47-8, மித்ர சப்தமி, சூரியவிரதம் |
| 8 | 23 | திங் | அ31-5 | சதை26-38 | சி56-38ம | வியாதியஸ்தர் குளிக்க |
| 9 | 24 | செவ் | நவ26-55 | பூரட்54-30 | ம54-30அ | பிரயாணம் விலக்க |
| 10 | 25 | புத | தச23-28 | உத்52-58 | சி52-58ம | கரிநாள் |
| 11 | 26 | வியா | ஏ20-38 | ரேவ52-8 | சித்52-8அ | மத்வ சர்வ ஏகாதசி, மச்ச துவாதசி |
| 12 | 27 | வெ | து18-38 | அஸ்52-10 | அ52-10சி | பிரதோஷம் |
| 13 | 28 | சனி | திர17-25 | பரணி53-3 | சித்53-3அ | அனங்கத் திரயோதசி |
| 14 | 29 | ஞா | ச○17-28 | கிரு※55-13 | சித்60 | கிருத்திகை, அண்ணாமலையார்தீபம், சிவதீபம், வைகாசதீபம், பௌர்ணமி |
| 15 | 30 | திங் | பவு18-25 | ரோ58-25 | அமி60 | விஷ்ணு தீபம், பாஞ்சராத்திர தீபம் |
| 16 | டிசம்பர் 1 | செவ் | பிர20-55 | மிரு60 | சித்60 | மார்க்கசிரபகுளம் |
| 17 | 2 | புத | து24-38 | மிரு2-58 | சித்60 | கரிநாள், ஜேஷ்டாகார்த்திகை 0-48 |
| 18 | 3 | வியா | திரி29-40 | திரு8-53 | மர8-53அ | |
| 19 | 4 | வெ | சது35-48 | புன15-40 | சி15-40ம | |
| 20 | 5 | சனி | பஞ்42-25 | பூசம்23-20 | சி23-20ம | |
| 21 | 6 | ஞா | சஷ்49-13 | ஆயி31-13 | சி31-13ம | |
| 22 | 7 | திங் | சப்55-23 | மக38-43 | ம38-43சி | |
| 23 | 8 | செவ் | அஷ்60 | பூர45-15 | சி45-15அ | |
| 24 | 9 | புத | அஷ்0-23 | உத்50-18 | அ50-18ம | |
| 25 | 10 | வியா | நவ3-48 | அஸ்53-35 | சித்60 | |
| 26 | 11 | வெ | தச5-15 | சித்54-52 | சித்60 | |
| 27 | 12 | சனி | ஏகா4-43 | சுவா54-13 | அ54-13சி | |
| 28 | 13 | ஞா | துவ2-10 திர57-48 | விசா51-40 | மர60 | பிரதோஷம், அவமாகம் |
| 29 | 14 | திங் | சது52-3 | அனு47-45 | சித்60 | மாச சிவராத்திரி |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 8உ தனு-பு<br>13 ,, மகர-சுக்<br>18 ,, மக-குரு<br>23 ,, விருச்சி | | ரா |
| கே | வக்கிரி-புதன் | | |
| குரு சுக் | சூரி புத | சனி செ | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR AT THE
"ANANDA BODHINI" POWER PRESS, 15, VENKATESA MAISTRY ST., MADRAS.